# கண்ணன் காட்டிய வழி

அல்லது

## பகவத்கிதையின் பொருள்விளக்கம்

சென்னை அரசாங்கப் பிரதம மந்திரி
சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்
இயற்றியது



முக்கியமான சுலோகங்களும் உரையும்
அடங்கியுள்ளது

விவேக போதினி காரியாலயம்,
மயிலாப்பூர், சென்னை

## பொருளடக்கம்



# கண்ணன் காட்டிய வழி

அல்லது

## பகவத்கீதையின் பொருள் விளக்கம்

---

## முன்னுரை

**ப**கவத் கீதையைத் தமிழில் அநேக வித்வான்கள் மொழி பெயர்த்திருக்கிறார்கள். ஸ்ரீ சங்கராசாரியர், ஸ்ரீ இராமானுஜாசாரியர், ஸ்ரீ மத்வாசாரியர் முதலிய மகான்கள் பகவத் கீதைக்கு எழுதி வைத்திருக்கும் பாஷ்யங்களோ சம்ஸ்க்ருதம் தெரிந்தவர்களுக்கு ஞானச் சுரங்கங்களாக விளங்குகின்றன. அந்தப் பாஷ்யங்களில் இல்லாததாய், புதிதாக, இக்காலத்தில் எழுதும் வியாக்கியானங்களில் என்ன கண்டு விட்டுச் சொல்ல முடியும்? அப்படியிருக்கையில் இதை நீ ஏன் எழுதுகிறாய் என்றால், உயர்ந்த பாஷ்யங்களுடன் சம்ஸ்க்ருதத்தில் கீதையைப் படிக்க வாய்ப்புப் பெறாதவர்களுக்கும், கீதை

முழுவதையும் படிக்காமல், சில சுலோகங்களை மட்டும் படித்துச் சாரத்தைக் கிரகிக்க எண்ணங்கொண்டவர்களுக்கும் ஒருவாறு பயன்படலாம் என்று எண்ணியே இதை எழுதப் புகுந்தேன். உண்மையில் இத்தகைய நூல் எழுத எனக்கு எவ்விதத்திலும் தகுதி இல்லை. குருடன் குருடனுக்கு வழி காட்டுவது போல் என்று சொல்வதில் கொஞ்சமும் மிகையிராது. ஆயினும் எழுதலாம் என்கிற எண்ணம் உதித்தது. இது அகம்பாவமா, அல்லது பெயர் சம்பாதிக்கலாம் என்கிற ஆசையா என்று சோதித்துப் பார்த்து, அப்படி ஒன்றுமில்லையென்று மனப்பூர்வமாய் நிச்சயித்து, ஒரு நல்ல காரியத்தில் பிரயத்தனம் செய்வதில் யாதொரு தோஷமுமிராது, பயனற்றுப்போகாது என்று தீர்மானித்துத் தொடங்குகிறேன். வழி காட்ட முடியாமல் போனாலும், அதாவது போய்ச் சேரவேண்டிய இடத்திற்குக் கொண்டுபோக முடியாமல் போனாலும் நடக்காமலே உட்கார்ந்து கிடக்கும் குருடனை மற்றொரு குருடன் 'வா, நடக்கலாம்' என்று எழுப்பி, வீட்டைச் சுற்றிச் சுற்றியாவது இருவரும் நடந்து வருவது ஒரு விதத்தில் நலமாயிருக்கலாமல்லவா? காலில் இரத்தம் கட்டிக்கொள்ளாமலாவது இருக்குமல்லவா? அவ்விதமானதே இது என்று வைத்துக்கொண்டு ஆரம்பிக்கிறேன்.

---

## 1

## பாரதக் கதையும் கீதையும்

**ப**கவத்கீதை மகாபாரதத்தில் ஒரு பாகம். யுத்தம் ஆரம்பிக்கப்போகும் சமயத்தில் இருபுறத்திலும் ஆயத்தமாக நிற்கும் சேனைகளைப் பார்க்கலாம் என்று அருச்சுனன் தன் தேரைச் சேனைகளின் நடுவில் கொண்டு போகும்படி சாரதியிடம் சொன்னான். அப்போது பந்துக்களும் சிநேகிதர்களும் ஒருவரை யொருவர் கொல்ல ஆயுதபாணிகளாக நிற்பதைக் கண்டு அவன் மனம் கலங்கி, "இதென்ன வேலை, இராஜ்யம் என்னத்திற்கு? பகைமை என்னத்திற்கு? சுற்றத்தாரைக் கொன்று சம்பாதித்த இராஜ்யாதிகார போகத்தில் என்ன சுகம்?" என்று சொல்லி, வில்லைக் கீழே போட்டுவிட்டுச் சோர்ந்து உட்கார்ந்தான். இந்தச் சந்தர்ப்பத்தில் அவனுக்குச் சாரதியாயிருந்த கண்ணபிரான் குருவாக நின்று உபதேசம் செய்த மொழிகளே பகவத்கீதை என்பது.

இப்படி அருச்சுனன், "யுத்தம் என்னத்திற்கு? நான் போர் செய்யமாட்டேன்" என்று சொன்ன காலத்தில், "யுத்தம் செய்வதே உன் கடமை" என்று உபதேசம் செய்ததை விவரிக்கும் இந்த நூல், எல்லா ஹிந்துக்களும் சம்பிரதாய வித்தியாசமில்லாமல் வேதம் போலவும் உபநிஷத்துகள் போலவும் ஒப்புக்கொள்ளும் ஒரு சாஸ்திரமாகி, பல்லாயிர வருஷங்களாக அங்கீகரிக்கப்பட்டு வந்திருக்கிறது.

மகா பாரதக் கதையில் ஒரு பாகமாக அமைக்கப்பட்டதாயினும், பகவத்கீதை தனிச் சிறப்பும் தனிப் பொருளும் கொண்ட யோக சாஸ்திரமாக வழங்கி விளங்குகிறது. உபநிஷத்துகளுடன் இதுவும் ஓர் உபநிஷத்தாக மதாசாரியர்களால் மதிக்கப்பட்டு வருகிறது. நூலின் பிரஸ்தாவனத்தையே பெரிதாகக் கருதி அதையொட்டியே உபதேசங்களையெல்லாம் பொருள்கொள்ளுவது சரியாகாது. ஆயுதங்களின் உதவிகொண்டு செய்யும் புறப்போரில், ஆரம்பித்த காரியத்தை நடுவில் விடாமல் நடத்தவேண்டி உபதேசித்த வார்த்தைகளாக முதலிலிருந்து கடைசிவரையில் வைத்துக்கொண்டே கீதையை வியாக்யானம் செய்தோமானால் இந்த அறநூலின் உண்மைப் பொருள் சரியாக விளங்காதுபோம்.

கீதையைப் படிக்கும்போது பிரஸ்தாவனத்தை மறந்துவிடுவதே நலம் என்பது என் அபிப்பிராயம். கீதையில் சொல்லப்பட்ட உண்மைகளும் உபதேசமும் எக்காலத்துக்கும் எச்சந்தர்ப்பத்துக்கும் பொருந்தியவையானபடியால், யுத்தகளத்தில் அருச்சுனனுக்கு ஏற்பட்ட மனக் கலக்கத்திற்கும் சந்தேகங்களுக்குங்கூடப் பொருத்தமான மருந்து கீதாவாக்கியங்களில் காணக்கூடும் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் குறிப்பிட்ட ஒரு சந்தர்ப்பத்தின் விஷயங்களைப் பிரமாணமாக வைத்துக்கொண்டு பொதுவான ஒரு தரும சாஸ்திரத்தை ஆராய்வது முறையாகாது.

## 2

## கீதையின் சிறப்பு

ஹிந்து சமூகத்தில் அடங்கிய சர்வ சம்பிரதாயங்களைச் சேர்ந்தவர்களும் சாஸ்திரமாகவும் பிரமாணமாகவும் ஒப்புக்கொள்ளும் பகவத்கீதையில் சில சுலோகங்களையாவது சிரத்தாபக்தியுடன் ஆழ்ந்த சிந்தனை கொண்டு படித்தோமானால் நம்முடைய முன்னோர்கள் கண்ட மெய்ப்பொருள்களும், ரிஷிகள் ஸ்தாபித்த ஹிந்து தருமமும் இன்னவையென்று விளங்கும். ஹிந்து தருமம் என்ற அஸ்திவாரத்தின் மேல்தான் நம்முடைய சகல நாகரிகமும், கலைகளும், இலக்கியங்களும், இந்தியாவில் நாம் பெருமை பாராட்டக் கூடிய மற்ற எல்லாப் பாக்கியங்களும் மாளிகைகளாக நிற்கின்றன. அந்த ஹிந்து தருமத்தை உள்ளபடி அறிவது நம்முடைய கடமையாகும். ஆகையால் சநாதன முறைப்படி வாழ்க்கையை நடத்த இயலாதவர்களும் கீதையின் சாராம்சத்தை நன்றாகப் படித்துத் தெரிந்துகொள்வது நன்மை பயக்கும். பகவத் கீதை 18 அத்தியாயங்களாக வகுக்கப்பட்டு 700 சுலோகங்கள்கொண்ட நூல். இவைகளிலிருந்து 226 சுலோகங்களை எடுத்து மொழி பெயர்த்துச் சொல்ல உத்தேசித்திருக்கிறேன். இந்த 226 சுலோகங்களின் பொருளை நன்றாகக் கிரகித்துக் கொண்டால் பகவத் கீதையின் சாரம் முழுதும் கிரகித்துக் கொண்டதாகவே வைத்துக்கொள்ளலாம்.

## 3

## சிற்றறிவின் மயக்கம்

பௌதிக சாஸ்திர விஷயங்கள் கொஞ்சம் தெரிந்தவுடனே சிலருக்கு மயக்கம் உண்டாகி விடுகிறது. அதிலும் மற்றவர்கள் செய்த ஆராய்ச்சியின் பயனை, குஜிலிக்கடையில் குறைந்த விலைக்கு வாங்கும் பழைய சாமான்கள் மாதிரி, உழைப்பில்லாமல் கிட்டிய அறிவு சிலருக்கு அதிக போதையை உண்டாக்கி விடுகிறது. எது சிறிது, எது பெரிது, எது அணுகி நிற்பது, எது தூரம் என்ற நிதான புத்தி கலைந்து விடுகிறது. எது தாம் அறிய முடியாததோ அது இல்லவே யில்லை யென்று சாதித்து விடுவார்கள். மனித அறிவுக்கு எட்டாதது அனைத்தும் பொய் என்று தள்ளிவிட முன் நிற்பார்கள். சாஸ்திரமாவது, அற நூலாவது, அனைத்தும் முட்டாள்கள் எழுதி வைத்தவை என்று சொல்வார்கள்; அதற்கு மேல் பேசினால், அவை யனைத்தும் பாமர மக்களை மோசம் செய்யவே வஞ்சனைக்காரர்களால் எழுதப்பட்டவை யென்றும் சாதிப்பார்கள். ஆனால் இதே பௌதிக சாஸ்திரங்களை ஆழ்ந்து பரிசோதித்தவர்கள், பிரகிருதி உண்மைகளைக் கண்டுபிடிக்க ஆயுள்நாள் முழுதும் தங்கள் சக்தி யவ்வளவும் செலுத்தி உழைத்த அறிஞர்கள், இப்படி உன்மத்தமடைவதில்லை. பௌதிக சாஸ்திர ஆராய்ச்சிப் புலவர்கள் மகா அடக்கம் கொண்டவர்களாக இருந்திருக்கிறார்கள். தாங்கள் கண்டது மிக்க அதிகமா



யினும், காணாததன் அளவுக்குக் கண்டது மிகச்சிறியது என்று அறிவார்கள். காலக்கிரமத்தில் இன்னும் பல விஷயங்களை ஆராய்ச்சி செய்து பௌதிக சாஸ்திரங்களைப் பெருக்கிக் கொள்ளக்கூடுமாயினும், மானிட அறிவுக்கு என்றென்றும் எட்டாததும் விஞ்ஞான ஆராய்ச்சி எல்லையைத் தாண்டினதாயுமுள்ள விஷயமும் உண்டென்று அவர்கள் அறிவார்கள். பௌதிக சாஸ்திரங்களை நன்றாக ஆராய்ந்து பயிற்சி செய்தவர்கள் அடக்கத்தை இழப்பதில்லை. தாங்கள் பெற்ற அதிக அறிவினாலேயே அதிக அடக்கமும் அடைகிறார்கள். விஞ்ஞான ஆராய்ச்சிக்கு அதீதமான பொருள் உண்டென்பதை ஒப்புக்கொண்டு அப் பரம்பொருளின் முன் அடக்கம் நிறைந்த அறிவுடன் தலை வணங்குகிறார்கள்.

# 4
## பரம்பொருளாராய்ச்சி

காரணங்களுக்கெல்லாம் காரணமாக நிற்கும் முதற்காரணம்—பிரகிருதி விதிகளுக்கெல்லாம் விதியாய் நிற்கும் பராசக்தி—மனிதனுடைய புத்தி ஆராய்ச்சிக்குள் அடங்காது. ஆனால் மனிதனுடைய புத்தியின் நிர்மாண அமைப்பினுடைய அழகினால், தன் குறைகளும் வரம்புகளும் தனக்குத் தெரியாமல் அது ஒரு பொய்யான பரிபூரண உணர்ச்சியுடன் நிற்கிறது. அப்படி யிராவிடின் அது வேலை செய்ய முடியாது. எத்தகைய விஷயமும் எத்தகைய உண்மையும் ஆராய்ந்து அறியக்கூடும் என்று அதற்குத்தோன்றுகிறது. இத்தோற்றம் அதன் அமைப்பின் சுபாவத்திலிருந்தே உண்டாகிறது. இது இயல்பே யாயினும், உண்மை வேறு. மனிதனுடைய புத்தி மிகச் சிறந்த அமைப்பாயினும் அது தான் எதனில் ஒரு பாகமோ அம்முழுமுதற் பொருளைத் தனக்குள் அடக்க முடியாது. எத்தனை அழகிய ஆழாக்கானாலும் அதில் உழக்குப் பிடிக்காது. ஒரு பலகையின் மீது நிற்பவன் அவ்வாறு நின்றபடியே அப்பலகையைத் தூக்கிக் கிளப்ப முடியாது. மகா பலவானானாலும் எது தன்னைத் தாங்குகிறதோ அதையே பெயர்த்தெடுக்க முடியாதல்லவா? அதை விட்டு இறங்கித்தான் தூக்க முடியும். வண்டியை இழுக்கும் குதிரையை வண்டிக்குள் ஏற்றிவிட்டால் அது வண்டியை இழுக்குமா? மனிதனு



டைய புத்தி பரம்பொருளை விட்டுத் தனியாக நிற்க இயலாது. ஆதலால் அப்பரம்பொருளையே இழுத்துச் செல்ல அதனால் முடியாது; அதாவது அதைத் தன் அறிவெல்லைக்குள் கொண்டு வர முடியாது. வயிற்றுக்குள்ளிருக்கும் ஆகாரப்பை எத்தகைய உணவையும் ஜீரணம் செய்யும். ஆனால், தன்னைத் தானே ஜீரணம் செய்து கொள்ள இயலாது. ஓர் அளவு செய்யலாம்; அதற்குள் அதன் சக்தியும் முடிந்து அதற்கு மேல் வேலை செய்ய முடியாமல் நிற்கும். ஒரு பாம்புக்கு எவ்வளவு கோரமான பசியும் ஆத்திரமுமுண்டானாலும் வாலைக் கௌவிக்கொண்டு தன்னைத் தானே விழுங்கிவிட முடியாது. அவ்விதமே அனைத்துக்கும் காரணமான பரம்பொருள் மானிட அறிவுக்குள் அடங்காது.

# 5

## ஆராயும் முறை

விஞ்ஞான ஆராய்ச்சியின் வரம்பை ஒவ்வொரு விஷயத்திலும் காணலாம். எந்த விஷயத்தை எடுத்துச் சோதித்தாலும் ஓர் அளவுக்கு மேல் உண்மையை அறிய முடியாது. வெட்டும் கிணற்றில் பாறை கண்டால் வெட்டுவதை நிறுத்த வேண்டுவதுபோல், எந்த ஆராய்ச்சியிலும் ஓரளவு ஆழ்ந்து சென்றபின் மனிதனுடைய புத்திக்கு அதீதமான பாறையின்மேல் மனிதன் மூளை மோதுகிறது; அதுவே ஆராய்ச்சி எல்லை. வேதாந்தம் மட்டில் அல்ல; பதார்த்த சாஸ்திர ஆராய்ச்சியிலும், கணித சாஸ்திரத்திலும் இந்த எல்லையை ஆங்காங்குச் சந்திக்கிறோம். நாம் கண்டதும் காணக்கூடியதும், பாலின்மேல் படிந்திருக்கும் ஆடையின் அளவே. அதன் கீழ் என்றென்றும் காணமுடியாத ரகஸியம். இவ்விதம் சாதாரண வியவச்சேத-பரிச்சேத சோதனைகளுக்கு அகப்படாத ரகஸியத்தைப்பற்றித்தான் வேதம், உபநிஷத்து, கீதை முதலிய சமய நூல்களும், தரும நூல்களும், முனிவர்களுடைய வசனங்களும், வாழ்க்கைச் சரித்திரங்களும் விவகரிக்கின்றன. ஐம்புலன்கள் மூலமாகவும், ஐம்புலன்களைக்கொண்டு அறிந்த உண்மைகளைப் பிரமாணமாக வைத்து அதன்மேல் யூகித்தும், அறியக்கூடிய வஸ்துக்கள் பௌதிக சாஸ்திர விஷயங்கள். இவற்றை மீறிய விஷயத்தை எப்படிக்



காணமுடியும், எப்படிக் காட்ட முடியும் என்பதே உலகத்தில் பல தேசங்களில் உண்டான மதங்களின் நோக்கமும் முயற்சியுமாம். ஆகையால்தான் மத நூல்களில் சொல்லப்படும் விஷயங்கள் பௌதிக சாஸ்திரங்களில் சொல்லப்படும் தெளிவான ஏதுக்களையும் ஆராய்ச்சிகளையும்போல் இல்லை. வெறும் பிரத்தியட்சப் பிரமாணத்தையோ, யுக்தி புத்தியையோ கொண்டு அறியக்கூடாத இந்த விஷயத்தை ஆராய்ச்சி செய்ய, பக்தி வேண்டும், தியானம் வேண்டும், சாந்தி வேண்டும், நியமம் வேண்டும், தவம் வேண்டும் என்று இவ்வாறு வேதத்திலும் மற்ற தரும நூல்களிலும் சொல்லப்படுகின்றது. பக்கத்திலுள்ள ஊருக்குக் கால் நடையாகப் போய்ச் சேரலாம்; தூரமாயிருக்கும் ஊருக்கு வண்டியும் மாடும் கொண்டுபோய்ச் சேர்க்கும். மரத்தின்மேல் ஏறுவது வேறு; கிணற்றில் இறங்குவது வேறு. புஷ்பத்தைக் காதிற்குள் வைத்தால் வாசனை தெரியாது. அழகிய படத்தை மூக்கினால் மோந்தால் அழகு தெரியாது. இந்திரியங்களுக்கு அடங்காத ஒரு பொருளை மனதில் விளங்கச் செய்வது இந்திரிய அனுபவத்தின்மேல் நாட்டிய பரிசோதனை முறைகளாலும் பிரமாணங்களாலும் ஆகாத காரியம். ஆகையால் பாரமார்த்திக விஷயங்களை ஆராய்ச்சி செய்ய, பக்தியும், நியமும், சுத்தமும், தியானமும், கடவுளை வந்தித்தலும், தவமும் வேண்டும். தவம் என்றால் புறக்கரணங்களையும் உட்கரணங்களையும் அடக்கி மனதை ஏகாக்ரமாக நிறுத்துவது; உடலைத் துன்புறுத்துவதன்று.

## 6

## ஏன் கவனிக்க வேண்டும்?

"எல்லாம் சரிதான்; ஆனல் புத்திக்கு அகோசரமான இத்தகைய பொருளைப்பற்றி மனிதன் ஏன் கவனிக்கவேண்டும்? அறியக்கூடாத விஷயத்தைப் பற்றிச் சிந்திப்பதிலோ ஆராயப் பார்ப்பதிலோ என்ன பயன்?" என்ற கேள்வி பிறக்கிறது. இதற்குச் சமாதானம் என்னவென்றால், பௌதிக சாஸ்திர ஆராய்ச்சிக்கு எட்டாததனுலேயே, இருக்கும் ஒரு பொருள் இல்லாமல் போய்விடாது. நாம் தொட்டு, கண்டு, மோந்து, கேட்டு, ஆராய்ந்து பார்த்த விஷயங்களுக்கு மேல், முதல் காரணமும் அனைத்துக்கும் ஆதாரமுமான ஒன்று உளது என்பது நிச்சயம். அதைத் தொடமுடியாது; அதன் உருவத்தை அறிய முடியாது; அதன் குணங்கள் புத்திக்கு எட்டாதவை; ஆனபோதிலும் அது எங்கும் எவ்விஷயத்திலும் கலந்து நிற்கிறது. சகல பதார்த்தங்களும், சகல சக்திகளும், மனிதனுடைய சொரூப முள்பட, எல்லாம் இந்த அறியக் கூடாத பொருளால் கவரப்பட்டிருப்பது உண்மை. இத்தகைய பெரிய ஓர் உண்மையைக் கவனிக்காமல் எப்படி இருக்கக்கூடும்? ஆகையால் பரம்பொருளைக் கவனிக்காமல் விட்டுவிட்டிருக்க முடியாது. இருட்டறையில் இன்னது இருக்கிறது என்று அறிய முடியாதுதான்; ஆனல் அதில் ஒரு முக்கியமான பண்டம் இருப்பது உறுதியா யிருக்குமாயின், அந்த இருட்டறையைக் கவனியாமல் விடமுடியுமா?



கணித சாஸ்திரிகளை விசாரித்தோமானல் அநேக கணிதப் பதங்களை எண்ணிக்கையாகக் கணக்கிட்டுப் போடமுடியாது என்பதைச் சொல்லுவார்கள். ஆயினும் அவைகளை நன்ருகக் கவனித்து அநேக முக்கியமான விஷயங்களைக் கணித்து வருகிருர்கள். அப்படிக் கணித்ததன் ஆதாரத்தைக் கொண்டு கட்டடங்கள் கட்டியும் யந்திரங்கள் செய்தும் வருகிருர்கள். ஒரு சக்கரத்தின் சுற்றளவுக்கும் அதன் குறுக்களவுக்கும் என்ன பரஸ்பரப் பிரமாணம், ஒரு சம சதுரத்தின் பக்க அளவுக்கும் மூலைக்கு மூலை அளவிற்கும் என்ன பரஸ்பரப் பிரமாணம் என்ருல், இந்தச் சாதாரண விஷயத்தைக் கூடக் கணக்கிட்டுச் சங்க்யா ரூபமாகச் சொல்லவே முடியாது. 4-க்கு வர்க்க மூலம் 2. 9-க்கு வர்க்க மூலம் 3. இதைப்போல் 2-க்கு வர்க்கமூலம் என்னவென்று தசாம்சத்திலாவது சாதாரண பின்ன ரூபத்திலாவது கணக்கிட்டு முடிவாகச் சொல்லமுடியாது. ஆயினும் இந்த அறியக்கூடாத இலக்கங்கள் வேலைக்கு மிகவும் உதவிவருவதைக் கணித சாஸ்திரிகளும், கட்டடங்கள், பெரிய வாராவதிகள், அணைக்கட்டுகள் முதலியனவற்றைத் தீர்மானிக்கும் நிபுணர்களும் அறிவார்கள். அதே விதமாக, கடவுளும் தருமமும் ஆராய்ச்சிக்கு அடங்கவில்லை யென்கிற காரணத்தைக் கொண்டு அவை காரியத்திற்கு உதவா என்று விட்டுவிடமுடியாது. வேதம்,

உபநிஷத்து, கீதை முதலிய நூல்களில் சொல்லப்படும் விஷயங்களின் வரம்பு, ஆதாரம், உருவம் முதலியவைகளை நிரூபித்து நிச்சயிக்க முடியாதாயினும், அவை வெகு முக்கியமான விஷயங்கள்; வாழ்க்கைக்கு மிகவும் அவசியமானவை.

கணிதம், பௌதிகம், இரஸாயனம் முதலிய விஞ்ஞான சாஸ்திர நூல்களின் பிரதம அத்தியாயங்களில் எவ்வளவு தெளிவாக உண்மைகள் விளக்கப்பட்டிருக்கின்றனவோ, அவ்வளவு தெளிவாக கீதையிலும், உபநிஷத்துகளிலும், இன்னும் உலகத்தார் மதிக்கும் வேறு தரும நூல்களிலும் விவரிக்கப்படும் விஷயங்கள் சொல்லப் படாததைக் கொண்டு இவை ஆதாரமற்றவை என்று எண்ணக் கூடாது. இந்திரியங்களுக்கு அதீதமான தத்துவங்களை ஆராய்ச்சி செய்து ஞானம் பெறுவதற்கு அறிவும் புத்தியும் மட்டும் போதா. பக்தியும், சுத்தமும், தவமும், தியானமும் அவசியம். தியானமும், தவமும் செய்வதற்கு இந்த நூல்கள் வழிகாட்டும்.

காயசுத்தமும் மனோசுத்தமும் கொண்டு தியானித்துப் பரமாத்மாவை வேண்டினோமானால், முதலில் விபரீதமாகவும், பரஸ்பர விரோதமாகவும் பொருளற்ற வார்த்தைகளாகவும் தோன்றியவைகூடப் பொருள் செறிந்து விளங்கும். மனதிற்கு எட்டாத விஷயம் பிரகாச மடைந்து ஜொலிக்கும். அவ்விதம் பகவானுடைய அருள் பெற்று அந்தராத்மா



வால் கண்டு ஆனந்தித்த விஷயத்தை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தவேண்டு மென்றால் சக்தியில்லாமலிருக்கலாம். ஆனால், அத்தகைய அருட்காட்சியும் ஆனந்தமும் உண்மையேயாகும்.

# 7
## சாஸ்திரம் படிக்கும் முறை

எந்த மதத்தையாவது சம்பிரதாயத்தையாவது சரியாகத் தெரிந்து கொள்வதற்குத் துவேஷமோ, அவமதிப்போ கொண்ட புத்தியால் இயலாது. ஒரு விஷயத்தைக் கௌரவித்தாலொழிய அந்த விஷயத்தின் உண்மை புலப்படாது. "மோசக்காரர்கள்; நம்மை ஏமாற்றுவதே இவர்கள் நோக்கமாயிருந்தது; ஏதோ லாபத்திற்குப் பொய்யும் மோசமும் கலந்து மதங்களை ஏற்படுத்தி, ஸ்மிருதிகளும் புராணங்களும் எழுதினார்கள்" என்று மனதையும் புத்தியையும் கெடுத்துக் கொண்டு படிக்க உட்கார்ந்தோமானால் ஒன்றும் விளங்காது. இப்படி எண்ணுவதும் மூடத்தனம். நமக்கு இப்போது இருக்கும் அறிவும் ஜாக்கிரதையும் சந்தேக உணர்ச்சியும் அக்காலத்து ஜனங்களுக்கும் உண்டு. அவர்களனைவரும் முட்டாள்கள் என்றும், வெகு சுலபமாக ஏமாற்றப்பட்டு வலையில் சிக்கிவிட்டார்கள் என்றும் எண்ணுவது தவறு. நமக்கிருக்கும் புத்திக்கூர்மை அக்காலத்திலும் ஜனங்களுக்கு இருந்தது. விஷயங்களில் புத்திசெலுத்தி ஆராய்ச்சி செய்து பொய்யும் மோசமும் கண்டுபிடித்துத் தள்ள அந்நாளில் அவகாச மில்லாமலும் போகவில்லை. மதங்களை ஸ்தாபித்த பெரியோர்களை நேரில் கண்டவர்களும் கேட்டவர்களும், அன்புடன் மதிக்கத் தகுந்த குணமும் வாழ்க்கையும் கொண்டவர்கள்



என்று அப்பெரியோர்களைக் கௌரவித்த படியால் தான் அம்மதங்கள் கொண்டாடப்பட்டு வந்தன. மோசத்தாலும் ஏமாற்றத்தாலும் அவை சக்தியடைந்து நிலைபெற்றன வென்று எண்ணுவது சுத்தத் தவறு.

எந்த ஸ்தாபனமும் எந்த முறையும் நாளடைவில் சில சுயநலக்காரர்கள் வசத்தில் வந்து அவர்களுடைய சுயநலத்திற்குக் கருவிகளாகிவிடும். அப்படியே மதஸ்தாபனங்களும் மதங்களுங்கூடக் கெட்டிருப்பது உண்மை. ஆனால் பிந்தி நடைபெறும் சீர்கேட்டை முந்தி உண்டாக்கிய மகான்களை அவமதிப்பதற்குக் காரணமாக வைத்துக் கொள்வது ஆராய்ச்சி முறையாகாது. சாக்கடையைப் பார்த்து மேகத்தில் அழுக்கிருந்தது என்று எண்ணலாமா? மேகத்தையும் மழையையும் எவ்வளவு கௌரவமாக நோக்க வேண்டுமோ அவ்விதமே ஆதி ரிஷிகளையும் அவர்கள் இயற்றிய தரும நூல்களையும் கௌரவித்துப் படிக்க வேண்டும். திருடனைக் கண்டு பிடிப்பதற்காக வீட்டில் சோதனை செய்ய நுழையும் போலீஸ்காரனுடைய மனோபாவத்துடன் கீதையையாவது பிற மதத்தார்கள் கௌரவிக்கும் மார்க்க தரிசன நூல்களையாவது படிப்பதில் பயனில்லை; படித்தலும் கூடாது. அத்தகைய நூல்களைப் படிக்கும்போது தகப்பனிடம் மகன் நெருங்குவதுபோல் பக்தியும் அன்புங்கொண்டு நெருங்கவேண்டும்.

இனி, கீதா சங்கிரகம் ஆரம்பம்.

# 8

# ஆத்மா

## [கீதை அத்தியாயங்கள் 2, 13.]

ஜீவன், ஜீவாத்மா, ஆத்மா, தேகி என்று பல பெயரால் சொல்லும் பொருளொன்று உடம்பிற்குள் உடம்பின் எஜமானனாக வாசம் செய்கிறது என்ற உண்மையை முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும். கண்ணுக்குப் புலப்படும் தேகம் மட்டில் உண்மை, அதைத்தவிர வேறு எதுவுமில்லை என்று எண்ணுவது தவறு. ஜீவன் புலன்களுக்குத் தோற்றப்படமாட்டான்; ஆயினும் தேகத்திற்குள் எங்கும் வியாபித்து எல்லாவற்றையும் நடத்தியும் அனுபவித்தும் வருகிறான். மனிதனுக்குள்ள புத்தி வேறு, ஆத்மா வேறு. உணர்ச்சி, நினைவு, ஆசை முதலிய மனோ பாவங்கள், நிதான புத்தி, விவேகம் இவைகளெல்லாம் மனிதனுடைய தேகத்தின் சுபாவமான தொழில்கள். இவையே ஆத்மாவல்ல. இவைகளையெல்லாம் தவிர்த்து இவைகளுக்குப் பின் நிற்பது ஆத்மா.

ஆத்மா உடம்பெங்கும் வியாபித்திருக்கிறது. வயிற்றிலோ, மார்பிலோ, தலையிலோ மட்டும் இருப்பதன்று. அதற்குத் தனி அவயவமாவது, கோசமாவது இல்லை. ‘ஈதர்’ அல்லது ஆகாசம் என்று பௌதிக சாஸ்திரிகள் கருதுகோளாகக் கொண்டிருக்கும் கற்பனா பதார்த்தத்தைப்போல் இதற்கும் எடையில்லை, இடமில்லை, அளவில்லை.



மனிதனுக்கு மட்டுமல்ல; எல்லாப் பிராணிகளுக்கும், கொடி செடி, மரங்களுக்கும் ஆத்மா உண்டு.

தேகம் என்பது ஆத்மாவுக்கு இருப்பிடம். ஆகையால் தேகத்தை க்ஷேத்ரம் என்றும், ஆத்மாவை க்ஷேத்ரி என்றும், க்ஷேத்ரத்தைக் கண்டவன் அல்லது க்ஷேத்ரக்ஞன் என்றும் சொல்வதுண்டு.

மனிதனோ, வேறு பிராணியோ, தாவரமோ, மரண மடைந்து விட்டால் அது தேகத்திற்குமட்டில் நடந்த சம்பவம். தேகந்தான் புதைக்கப்படும், சுடப்படும், அல்லது பிராணிகளுக்கு இரையாகும்; ஆத்மா சாகாது; அதைச் சாகவடிக்கவும் முடியாது. மக்கள் இறந்தார்கள் என்று துயரப்படுவது மூடத்தனம். கிழிந்த துணியை அல்லது வேண்டாத உடுப்பை எடுத்துவிட்டுப் புது வஸ்திரம் அணிவது போல் ஆத்மா, வேறு தேகத்திற்குள் செல்ல, பழைய தேகத்தை நீக்கிக் கொண்டான். இவ்வளவே உண்மை. இதற்கு நாம் ஏன் துயரப்பட வேண்டும்?

श्रीभगवानुवाच ।

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥

கண்ணன் சொல்லுகிறான்:

எவரைக் குறித்துத் துயரப்பட அவசியமில்லையோ அவர்பொருட்டுத் துயர்ப்படுகிறாய்.

அறிஞர் பேச்சும் பேசுகிறாய். இறந்தார்க்கேனும் இருப்பவர்களுக்கேனும் அறிஞர் துயரப்படார். [2-11]

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतःपरम् ॥

இதன் முன் எக்காலத்திலும் நான் இல்லாதிருந்ததில்லை. நீயும் இங்குள்ள வேந்தர் யாவரும் அப்படியே. இனி ஒருநாளும் நாம் இல்லாமற் போகவும் மாட்டோம். [2-12]

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥

ஆத்மாவுக்கு இவ்வுடலில் எப்படிப் பால்யம், யௌவனம், மூப்பு தோன்றுகின்றனவோ அங்ஙனமே வேறொரு சரீரமும் பிறப்பும் ஏற்படுகின்றன, என்றால் இதற்காகத் தீரன் கலங்குவானேன்? [2-13]

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥

இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளுடம்பிலும் பரந்துநிற்கும் பொருள் அழிவற்றதென்றறி. கேடற்ற இதனை அழித்தல் யார்க்கும் இயலாது. [2-17]



न जायते म्रियते वा कदाचि-
न्नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो
न हन्यते हन्यमाने शरीरे ॥

இவன் பிறப்பதுமில்லை; எக்காலத்திலும் இறப்பதுமில்லை. இவன் ஒரு முறை இருந்து பின்னர் இல்லாது போவதுமில்லை; பிறப்பற்றான், நித்யன், சாசுவதன், பழையோன்; உடம்பு கொல்லப்படுகையில் இவன் கொல்லப்படான். [2-20]

वासांसि जीर्णानि यथा विहाय
नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णा-
न्यन्यानि संयाति नवानि देही ॥

நைந்த துணிகளைக் கழற்றி யெறிந்துவிட்டு, மனிதன் புதிய துணிகள் கொள்ளுமாறு போல், ஜீவன் நைந்த உடல்களைக் களைந்து புதியனவற்றை எய்துகிறான். [2-22]

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥

பிளத்தற்கரியவன்; எரித்தற்கும் நனைத்தற்கும், உலர்த்துதற்கும் அரியவன்; நித்யன்;

எங்கும் செல்பவன்; நிலை கொண்டவன்; அசையாதான்; என்றும் மாருதவன். [2-24]

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥

வெளிப்படையாகான், சிந்தனைக்கு அரியான், விகாரப்படாதான் என்று சுருதியில் சொல்லப்படுகிருன். ஆதலால் இவனை இத் தன்மையோன் என்றறிந்து நீ துயர்ப் படாதிருக்கக் கடவாய். [2-25]

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥

எல்லாருடம்பினு முள்ள இந்த ஆத்மா கொல்ல முடியாதவன். ஆதலால் நீ எந்த உயிரின் பொருட்டும் வருந்துதல் வேண்டாம்.[2-30]

यावत्संजायते किञ्चित्सत्त्वं स्थावरजङ्गमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥

ஸ்தாவரமாயினும் ஜங்கமமாயினும் ஒருயிர் உண்டாயின் அது க்ஷேத்ரமும் க்ஷேத்ரக்ஞனும் சேர்ந்தமையால் உண்டானதென்று அறி. [13-27



यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथाऽऽत्मा नोपलिप्यते ॥

எங்கும் ஊடுருவிச் சென்றிருந்தாலும் ஆகாசம் தன் நுண்மையால் எதனுலும் தீண்டப்படாமல் நிற்பதுபோல், உடம்பில் ஆத்மா எங்குமிருந்த போதிலும் எதனுலும் தீண்டப் படுவதில்லை. [13-33]

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥

சூரியன் ஒருவனாய் இவ்வுலக முழுதையும் எங்ஙனம் ஒளியுறச் செய்கிருனே அதுபோல் க்ஷேத்திரத்தை உடையோன் க்ஷேத்திரம் முழுதையும் பிரகாசமடையச் செய்கிருன். [13-34]

## 9

## கர்ம விதி

### [கீதை அத்தியாயம் 15.]

ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் என்ன பரஸ்பர சம்பந்தம்? தேகத்துக்கும் தேகத்தையாளும் ஜீவனுக்கும் என்ன சம்பந்தம்? இவைகள் இப்போது சொல்லப்படும். தேகத்துக்கு ஜீவாத்மா எப்படியோ, அப்படி ஜீவாத்மாவுக்குப் பரம்பொருள். தேகத்தை எப்படி ஜீவன் சேதனப் பொருளாக்கிப் பிரகாசித்துக்கொண்டு அதற்குள் அந்தர் பாவமாய் இருந்து வருகிறதோ, அதேமாதிரி ஜீவனுக்குள் பரமாத்மா அந்தர் பாவமாய் நின்று அந்த ஜீவனைத் தாங்கி வருகிறான் என்று சொல்லலாம்.

ஜீவன் எப்படி ஒன்றன்பின் ஒன்றாகப் பல தேகங்களைத் தரிக்கிறதோ, எப்படி ஒவ்வோர் உருவத்தைத் தரிக்கும்போதும் அது அந்த அந்த உருவமாகிறதோ, அதேமாதிரி பரமாத்மா பல ஜீவன்களை ஒரே காலத்தில் தரித்து நிற்கிறான். ஓர் ஆத்மா, இராஜாவாகவோ, பிச்சைக்காரனாகவோ, மாடாகவோ, பன்றியாகவோ, மாமரமாகவோ, புழுவாகவோ உருவெடுப்பதுபோல் பரப்பிரம்மமும் பல உருவெடுத்து நிற்பதாய்ச் சொல்லலாம். ஆனால் ஆத்மாவே அரசனாய் விடவில்லை; புழுவாகவுமில்லை. அதேமாதிரி பரமாத்மாவும்



மனிதனாய் விடவில்லை; தனிப்பட்டே நிற்கிறான். எந்தத் தேகத்துக்குள்ளும் எந்த வஸ்துக்குள்ளும் பரம்பொருள் நின்று அதைத் தாங்கி வருகிறது என்பது இதன் பொருள். அதைத் துண்டுகளாக்க முடியாது; பல பொருள்களில் நின்றாலும் அதன் ஒருமை சிதறிப் போகாது.

பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தத்தை இதற்குமேல் விசாரிக்கப் புகுந்தோமானால், துவைத, அத்வைத, விசிஷ்டாத்வைத வாதங்களில் போக வேண்டியதாகும். பகவத் கீதையில் துவைதாத்வைதப் பிரச்னையை எடுத்துக் கொள்ளவில்லை. மூவிதக் கோட்பாடுகளுக்கும் கீதையையே பிரமாணமாக வைத்துக்கொண்டு மதாசாரியர்கள் பாஷ்யம் செய்திருக்கிறார்கள். உபநிஷத்துக்களும் இப்படியே மூவிதக் கோட்பாடுகளுக்கும் இடம் கொடுக்கும்.

ஜீவாத்மாவுக்கும் பரமேசுவரனுக்கும் என்ன சம்பந்தம் என்னும் விஷயத்தில் அபிப்பிராய வேறுபாடுகள் இருந்தாலும், மூவித ஸம்பிரதாயங்களிலும் கர்ம விதி ஒப்புக்கொள்ளப்படுகிறது. அதாவது, ஜீவன் கர்மவிதியில் பத்தப்பட்டு நிற்கிறான் என்பது.

புலன்களும், புலன்களை நடத்தும் மனமும் ஆக ஆறும் கொண்டது தேகம். இதுவே ஜீவனுக்கு வீடு. இந்த வீடு அசேதன பூத பிரகிருதியைக் கொண்டு ஆக்கப்பட்டது. ஒரு தேகத்தைத் தரிக்

கும் ஆத்மா அத்தேகத்தைக்கொண்டு விஷயங்களை அனுபவிக்கிறது. செயல்களெல்லாம் குணங்களாக மாற அக்குணங்கள் ஆத்மாவைத் தொடர்ந்து நிற்கின்றன. ஒரு தேகத்தை விட்டு வேறு தேகத்தைத் தரிக்கும்போது முன் ஜன்மத்தில் அடைந்த கர்ம பலன்கள் ஆத்மாவைப்பற்றி நிற்கும். இதுவே புது தேகத்தின் மூலதனம், அல்லது குணம். ஓர் உடலை விட்டு வெளியேறும்போது ஆத்மா அவ்வுடலில் அடைந்த குணங்களைக் கொண்டேகுகிறது. அவைகளுடன் புது உடலில் பிரவேசிக்கிறது. காற்று ஒரு தோட்டத்தின் வழி வீசும்போது அவ்விடத்திலுள்ள வாசனைகளை எடுத்துச் செல்வதுபோல் ஆத்மாவும் தான் எடுத்த ஜன்மத்தின் கருமங்களைச் சூக்ஷ்ம உருவத்தில் கொண்டு செல்கிறது.

ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥

எனதொரு கிரணம் ஜீவலோகத்தில் சென்று அங்கே என்றுமுள்ள ஜீவனாகி ஐந்து இந்திரியங்களையும் ஆறாவதாக மனதையும் சேர்த்துக்கொண்டு நிற்கிறது. [15-7]

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥

ஆங்காங்குள்ள வாசனைகளைக் காற்று பற்றிச் செல்லுவதுபோல் எஜமானனை ஆத்மா



யாதேனுமோர் உடலை எய்துங்காலத்தும் விடுங்காலத்தும் இவைகளைப் பற்றிச் செல்லுகிறான். [15-8]

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥

கேட்டல், காணுதல், தீண்டுதல், சுவைத்தல், மோத்தல் இவைகளுக்குரிய புலன்களிலும், மனதிலும் நிலைகொண்டு ஜீவன் விஷயங்களை அனுபவிக்கிறான். [15-9]

ஒரு ஜீவனுடைய பரிணாமம் அவன் கையிலேயே இருக்கிறது. நற்கருமமும் தீயகருமமும்செய்து தனக்குத்தானே நன்மையுந் தீமையும் தேடிக்கொள்ளுகிறான். ஆத்மா மேன்மை யடையவும் கீழே செல்லவும் வழி அவன் செயலே. இந்தப் பொறுப்பும் சுதந்திரமும் ஜீவனுக்கு உரிமை. இது மரணத்தால் தடையாகாது. ஒரு தேகத்தில் தங்கிய காலத்தில் தான் செய்த செயல்கள் அந்தத் தேகம் நீங்கியவுடன் தீர்ந்து போகா. மறு ஜன்மத்தில் கணக்கு ஆரம்பிக்கும்போது, முதல் பேரேட்டின் ஆதாய நஷ்டக் கணக்கைச் சேர்த்துக்கொண்டுதான் போக வேண்டும். இதுதான் கர்ம விதி.

உலகத்தில் காணும் சுக துக்கங்களுக்கும்,குண பேதங்களுக்கும் காரணம் தேடி ஆராய்ந்து சொல்லும் எந்த மதக்கோட்பாட்டுக்கும் ஆட்சேபனைகள்

காட்டலாம். எவ்விதச் சமாதானம் தேடினாலும் குறைகள் இருக்கவே இருக்கும்; புத்தி பரிச்சேதத்திற்கு முற்றிலும் அடங்கி நிற்காது. இதுவே பீடிகையில் சொல்லிய ஈசுவர ரகஸியம். ஆனால் 'புலப்படும் தேகத்திற்குள் புலப்படாத ஆத்மா ஒன்றுண்டு; அதற்கு மரணமில்லை' என்பதை ஒப்புக்கொண்டால், சர்வ பௌதிக சாஸ்திர அனுபவத்திற்கும் ஒத்திருக்கும் கோட்பாடு, ஹிந்து மதத்தில் சொல்லப்படும் இந்தக் கர்ம விதியொன்றே. வேறு எந்தக்கொள்கையும் இதைவிட அதிக ஆட்சேபனைகளுக்கு இடங்கொடுக்கும். பதார்த்த சாஸ்திரத்தில் ஜடப்பொருளுக்கும் ஜடவேகத்திற்கும் அவிநாசத்வம் சொல்லப்படுகிறது. அதாவது ஒரு பதார்த்தத்தையோ ஒரு வேகத்தையோ உருவம் மாற்றலாமே யொழிய, இல்லாமல் செய்துவிட முடியாது. அந்தக் கோட்பாட்டைக்கொண்டே பௌதிக சாஸ்திரம் முழுதும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. அசேதன அவிநாசத்வத்தைச் சேதன வேகத்திற்குப்பிரயோகிப்பதே கர்ம விதி. ஹிந்து தர்மத்திற்கு இது அடிப்படையான கொள்கை; காரண காரியத்தின் நிரந்தர சம்பந்தத்தின் மேல் ஏற்பட்ட உண்மை. காரணத்திற்குச் சமம் காரியம். காரணம் பலனின்றி மறையாது. காரணத்தின் மறு உருவமே பலன். ஆகையால் தேக வியோகமான பின்னும் ஆத்மா உண்டெனில், ஆத்மாவைப்பற்றிய மட்டில் அதன் செயல்களின் பலன் அதைத் தொடர்ந்தே நிற்கும்.



இதுதான் கர்ம விதி. 'இன்ஸால்வென்ஸி கோர்ட்'டில் கடன்களை ரத்துசெய்து விடுவதுபோல் கர்ம விதியில் கிடையாது. பழைய கணக்கைத் தீர்த்தேயாகவேண்டும்.

## 10

## கர்ம பலன்

ஒரு குளத்தில் ஒரு கல்லைப் போட்டால் அது ஜலத்தைக் கலக்கி அலைகளை உண்டாக்கும். எவ்வளவு சிறிய கல்லும் வேகத்திற்கும் பாரத்திற்கும் தகுந்த அலைகளைக் கிளப்பும். கண்ணுக்குத் தெரியாத சிறு கலக்கமானாலும் அதன் வேகம் அலைமேல் அலையாகச் சென்று கரையை மோதும். ஓர் அலை மற்றோர் அலையை வெட்டும். ஒன்றோடு ஒன்று சேர்ந்து பெருகுவதும் குறுகுவதுமுண்டு. ஆனால் எந்தச் சிறிய சலனமும் வீண்போகாது. இவ்விதமே நம்முடைய செயல்களும். ஆத்மாவைப் பொறுத்த மட்டில் மனதில் உதிக்கும் எண்ணங்களும் ஆசைகளும் செயல்களே ஆகும். வெகு ரகசியமான மனத் தோற்றமுங்கூடப் பரம்பொருள் என்ற ஆகாச சமுத்திரத்தில் அலைகளை உண்டாக்கிச் செல்லும். அது தன் பலனை உண்டாக்கியே தீரும். அந்தப் பலனைத் தீர்த்துக்கொள்ள ஜீவன் மறுபடியும் யத்தனித்துத் தீரவேண்டும். ஒருவன் மற்ற ஜீவன்களுக்கு உண்டாக்கும் சுகத்திற்கும் துக்கத்திற்கும் தகுந்த தண்டனையோ வெகுமதியோ அடைவது ஒருபுறமிருக்க, நாம் எண்ணும் ஒவ்வோர் எண்ணமும், செய்யும் ஒவ்வொரு செயலும், உடனே நம்மையே தாக்குகின்றன. எவன் ஒரு செயல் செய்கிறானோ அவன் அதன் பயனை முதலில் அடைகின்றான். அதாவது ஆத்மாவின் குணச்சுவை



அச்செயலால் மாறுபடுகிறது. இன்று நான் ஒரு நல்ல எண்ணம் எண்ணினேனானால், அல்லது நற்கருமம் செய்தேனானால், அந்த அளவுக்கு என் குணம் உடனே மேன்மை யடைகிறது. ஒரு தீங்கு நினைத்தேனானால், அல்லது இழிவான மனத்தோற்றத்திற்கு இடங்கொடுத்தேனானால், அந்த அளவிற்கு ஆத்மா கீழ்நோக்கிச் சென்றது. தட்டான் தங்க ஆபரணத்தைத் தட்டி உருவாக்குவதுபோல் நம்முடைய ஆத்மாவை நாம் கர்மம் என்கிற சுத்தியால் ஒவ்வொரு க்ஷணமும் தட்டிக்கொண்டே இருக்கிறோம். உடலைவிட்டுப் பிரியும்போது அதன் வடிவம் எத்தன்மையது என்பது, வாழ்நாளில் செய்த செயல்களையும் எண்ணிய எண்ணங்களையும் பொறுத்திருக்கிறது.

இன்று நான் கோபத்தைப் பொறுத்தேனானால் நாளை பொறுப்பது எளிதாகும். பொறுமையே சுபாவமாய்விடும். இன்று காமபரமான எண்ணத்திற்கு இடம் கொடுத்தேனானால் நாளை அதன் வேகத்தைத் தாங்கமாட்டேன்; அதுவே வழக்கமாய்விடும். செய்த தீமைக்கோ, எண்ணிய இழிவான எண்ணத்திற்கோ இன்று பச்சாத்தாபம் அடைந்து உண்மையில் வருத்தமடைந்தேனானால், நாளை அந்த எண்ணம் அணுகாது. இப்படியே எல்லாக் குணங்களும். சாகும் காலத்தில் தலைச்சுமை இதுவே. வாழ்நாளை எப்படி உபயோகித்தோமோ அப்படியே யாகும் மறு ஜன்மத்தின் தலைச்சுமை.

# 11

## கர்மவிதிக்கு ஆட்சேபங்கள்

"எல்லாம் விதிக்கு அடங்கியது. நாம் என்ன செய்தால் என்ன?" என்று சொல்வது கர்ம விதியன்று. கர்ம விதியென்று ஹிந்து சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கொள்கை வேறு; மனிதப் பிரயத்தனத்தில் பயனில்லை, எல்லாம் 'தெய்வ'ச் செயல் என்று சொல்லுவது வேறு. புருஷப் பிரயத்தனம் அவசியம், அதுவே பிரதானம் என்பது கர்ம விதி. புருஷப் பிரயத்தனத்தில் பயனில்லை என்று சொல்லுவதற்குக் கர்ம விதி நேர் எதிரிடை; நேற்றுச் செய்த செயலின் பயன் இன்று அனுபவித்துத்தான் தீரவேண்டும் என்பது, மனிதனுடைய சுதந்திரத்தை எடுத்து விட்டது போல் ஆகாது. எல்லாம் ஆண்டவன் இஷ்டம், அவ்வப்போது அவனுக்கு என்ன தோன்றுகிறதோ அதுதான் நடைபெறும் என்பது வேறு மதத்தினரின் கோட்பாடு. அக்கோட்பாடுகள் புருஷப் பிரயத்தனத்தின் சக்தியைக் குறைப்பதாகும். ஹிந்துமதக் கொள்கைதான் பூரணப் பொறுப்பும் பூரண சுதந்திரமும் மனிதனுக்குக் கொடுக்கிறது. எல்லாம் ஈசுவரன் செயல், ஈசுவரன் அனுமதியின்றி ஒன்றுமில்லை என்பது உண்மைதான். ஆனல் கர்ம விதியும் கடவுள் செயலே யன்றி வேறில்லை. கர்ம விதியென்பது தெய்வமல்ல; அது தெய்வத்தால் ஏற்படுத்தப்பெற்ற ஒரு விதியாகும். ஜகம் முழுவதும்



ஓர் அமைப்புக் கிரமத்திற்கு உட்பட்டிருக்கிறது. அந்த அமைப்புக் கிரமத்தில் கர்ம விதியும் ஒன்று.

"ஆமாம்! இது ஒரு கற்பனையே தவிர வேறில்லை. தாய் தகப்பன் முகச்சாயல், தாய் தகப்பன் குணம், இவைதான் மக்களைத் தொடருகின்றன. இதுவே நம்முடைய அனுபவம்" என்று கர்ம விதிக்கு ஆட்சேபனையாகச் சொல்லலாம். ஆனல் இது ஆட்சேபனையாகாது. எந்த ஆத்மா எந்த உடலைத் தரிக்கிறன் என்பது வேறு; தகப்பனைப் போல் மகன் என்னும் தேக தர்மம் வேறு. மகனுடைய தேகமும் குணமும் தகப்பனைக் கொண்டனவாயிருக்கும். ஆனல் எந்தத் தகப்பனுக்கு எவன் மகனுகப் பிறந்தான் என்பது யாருக்குத் தெரியும்? தகப்பன் உடலைப் போலிருக்கும் மகன் உடல் என்பது உண்மை. ஆனல் அந்த மகன் உடலில் எந்த ஆத்மா புகுந்திருக்கிறது என்பது வேறு விஷயம். அதைத்தான் கர்மவிதி நிச்சயிக்கிறது.

தீரா நோயையோ அல்லது தீய குணங்களையோ கொண்ட ஒருவன் வயிற்றில் பிறப்பவன் அந்த நோயையும் அக்குணங்களையும் பெறுவான். ஆனல் அப்படிப் பெறுவதற்கு எந்த ஆத்மா தன் கர்மத்தினல் தகுதி யடைந்ததோ அந்த ஆத்மாதான் அந்தத் தகப்பன் வயிற்றில் பிறக்கும். ஆஸ்தி, உடல், குணம் இம் மூன்றிலும், முதலது, அரசாங்க விதியாலும் மற்றவை தேக தருமத்தினலும் பரம்பரையாக வரும். இந்தப் பரம்பரைப் பாத்தியத்தை

யார் பெறுவது என்று தீர்மானிப்பது அந்தஅந்த ஆத்மாவின் கர்மம். ஓர் என்ஜினியர் தனக்குத் தெரிந்த மாதிரியும் தன்னிஷ்டப்படியும் வீட்டைக் கட்டலாம். ஆனால் அதில் வசிப்பவன், அதன் விலையைக்கொடுத்துஇஷ்டப்பட்டுவாங்குகிறவன் யாரோ அவனே. விலை கொடுப்பதும் இஷ்டப்படுவதும் நாம் செய்யும் கருமங்களின் வழியாகத்தான். ஒருவன் தன் வீட்டைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கலாம்; அதற்குத் தகுந்த ஏழை ஒருவன் பிந்தி அதை விலைக்கு வாங்கியோ வாடகை கொடுத்தோ அதில் குடியிருக்க வருகிறான். அம்மாதிரி தகப்பன் தன் உடலையும் குணத்தையும் கெடுத்துக் கொண்டு தனக்குப் பிறக்கும் குழந்தைகள் உடலையும் குணத்தையும் முன்னதாகவே கெடுக்கக்கூடும். ஆனால் அந்த உடல்களுக்குத் தகுந்த ஆத்மாக்கள் தான் அவனுக்கு மக்களாக உடலெடுக்க வேண்டி வரும். 'அவுரஸ புத்திரன்' என்பது உடலைப் பொறுத்தமட்டிலேதான். எந்த ஆத்மாவுக்கும் எந்த ஓர் ஆத்மாவும் மகன் அல்ல. கர்மத்துக்குத் தக்கபடி ஸ்வீகார புத்திரனைப்போல வந்து சேருபவன்தான் மகன். ஆகையால் பிரகிருதி சாஸ்திரங்களில் சொல்லப்பட்டதும் நம்முடைய அனுபவத்தில் கண்டதுமான பரம்பரா விதியாகிய தேக தருமம், கர்மவிதிக்கு மாறாகாது.

## 12

## பிரகிருதி : ஜீவன் : பரமாத்மா

[கீதை அத்தியாயங்கள் 7, 9, 13, 15.]

பிரபஞ்சத்திலுள்ள எல்லா உயிரற்ற வஸ்துக்களும், ஸ்தாவர ஜங்கமப் பிராணிகளுடைய தேகங்களும், பிராணிகளுடைய இந்திரிய மனோ புத்தி சூக்ஷ்மங்களும் உள்பட எல்லாவற்றிற்கும் சேர்ந்து 'பிரகிருதி' என்று பெயர். ஒவ்வொரு பிராணியின் வெளி உருவத்திற்குள்ளும் அதன் எஜமானனாக இருந்துகொண்டு அதை நடத்தி அதன் மூலம் விஷயங்களை அனுபவித்து வருவது ஜீவன். அந்தப் பிரகிருதி, ஜீவன், இவைகள் இரண்டுக்கும் பின் மறைந்து நின்றுகொண்டு, நிலையில்லாமல் மாறி மாறி வரும் பிரபஞ்சத்தையெல்லாம் தாங்கி, ஓர் அமைப்பாக ஆண்டு வருகின்ற, மாறுதலும் அழிவும் இல்லாத பரமாத்மாவுக்குத்தான் ஈசுவரன் என்றும், ஸ்ரீமந் நாராயணன் என்றும், இன்னும் அநேக பெயர்களும். அவன் எந்த வஸ்துவுக்குள்ளும் மறைந்து கிடக்கிறான்; எந்த உயிருக்கும் உயிராக நிற்கிறான்; தனித்தும் நிற்கிறான்.

ஜகத்தின் அமைப்பைப்பற்றிக் கீதையின் 7-வது, 9-வது, 13-வது, 15-வது அத்தியாயங்களில் சொல்லப்படுகிறது. அவைகளின் கருத்து மேலே சுருக்கமாகச் சொல்லப்பட்டது. முக்கியமான சுலோகங்கள் :—

प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसम्भवान् ॥

பிரகிருதி, புருஷன் இவ்விரண்டும் அநாதியென்று உணர். உருவ வேறுபாடுகளும், குணங்களும் பிரகிருதிப் பொருளில் உண்டானவையென்று உணர். [13-20]

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥

கார்யங்களை ஆக்கும் ஹேதுவைப் பிரகிருதி வஸ்து என்பர். சுக துக்கங்களை உணரும் ஹேதுவைப் புருஷன் என்பர் [13-21]

पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।
कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥

புருஷன் பிரகிருதியில் இருந்துகொண்டு பிரகிருதியிடம் பிறக்கும் குணங்களை அனுபவிக்கிறான். குணங்களினிடம் இவனுக்குள்ள பற்றுதலே இவன் நல்லனவும் தீயனவுமான ஜன்மங்களில் பிறப்பதற்குக் காரணமாகிறது. [13-22]

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥

உலகத்தில் க்ஷரம் அக்ஷரம் என இரு வகைத் தத்துவங்கள் உள. க்ஷரம் என்பது



எல்லா உயிர்களும். அவைகளில் மாறுதலற்ற பொருள் அக்ஷரம். [15-16]

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥

புருஷன் என்பது ஜீவன். உத்தம புருஷன் வேறு. அவனே பரமாத்மா எனப்படுவோன். அவன் மூன்று உலகங்களினுள் புகுந்து நின்று அவற்றைத் தரிக்கிறான்; அவ்யயன், ஈசுவரன். [15-17]

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥

நான் க்ஷரத்தைக் கடந்தோனுதலாலும், அக்ஷரத்தைக் காட்டிலும் உத்தமனுதலாலும், உலகத்தாராலும் வேதங்களாலும் புருஷோத்தமன் என்று கூறப்படுகிறேன். [15-18]

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥

மண், நீர், தீ, வாயு, ஆகாசம், மனம், புத்தி, அகங்காரம், இவ்வெட்டு வகையாக என் பிரகிருதி பேதப்பட்டிருக்கிறது. [7-4]

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥

இது என் கீழ்ப்பட்ட இயற்கை. இதினின்றும் வேறுபட்டதாகிய என் உயரியற்கையை அறி. அதுவே உயிர்களுக்கு உயிராவது. அதனால் இவ்வுலகு தரிக்கப்படுகிறது. [7-5]

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥

எல்லா உயிர்களுக்கும் அது காரணமென்று உணர். அவ்வாறே உலகம் முழுவதும் என்னிலிருந்து உண்டாகிறதும் என்னில் மறைந்து இல்லாமற் போவதுமாகும். [7-6]

मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥

என்னை அகன்று நிற்கும் பொருள் எதுவுமில்லை. நூலில் மணிகளைப்போல் இவ்வையகமெல்லாம் என்னில் கோக்கப்பட்டு நிற்கிறது. [7-7]

रसोऽहमप्सु कौन्तेय प्रभाऽस्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥

நீரிலுள்ள ரஸம் நான். நானே, சூரிய சந்திரர்களின் ஒளி. எல்லா வேதங்களிலும் நான் பிரணவம். ஆகாசத்தில் சப்தம் நான். மக்களிடத்து நான் ஆண்மை. [7-8]



पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥

பூமியின் தூய மணமும், தீயின் தேஜஸும் எல்லா உயிர்களின் உயிரும் நான்; தவஞ் செய்வோரின் தவம் நான். [7-9]

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥

எல்லா உயிர்களுக்கும் நான் ஸநாதனமாகிய விதையென்று உணர். புத்தியுடையோரின் புத்தி நான். ஒளியுடையோரின் ஒளி நான். [7-10]

बलं बलवतामस्मि कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥

வல்லோரிடத்தே ஆசையும் சினமுமற்ற வலிமை நான். உயிர்களிடத்துத் தருமத்துக்கு மாறுபாடில்லாத காதல் நான். [7-11]

ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥

ஸத்வ ராஜஸ தாமஸ குணங்களைச் சார்ந்த மன நிலைகளெல்லாம் என்னிடத்தே பிறந்தன. அவை என்னுள் இருக்கின்றன. நான் அவற்றுள் இல்லை. [7-12]

त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥

இந்த மூன்று குணங்களாகிய எண்ணங்களால் உலகம் முழுதும் மயங்கிப்போய் இவற்றைத் தாண்டி நிற்கும் அழியாப் பொருளாகிய என்னை உணரவில்லை. [7-13]

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥

குணங்களால் அமைக்கப்பட்ட இந்த என் தேவ மாயை கடத்தற்கு அரிது. என்னையே யாவர் சரணடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைக் கடக்கின்றார்கள். [7-14]

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥

யோக மாயையால் சூழப்பட்டிருப்பதால் நான் உலகத்தாருக்கு வெளிப்படுவதில்லை. இந்த அறிவில்லா உலகத்திற்குப் பிறப்பும் அழிவுமில்லாத என்னைப்பற்றித் தெரியாது. [7-25]

इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परन्तप ॥

இச்சை, துவேஷம் என்பவைகளால் உண்டாகும் இருவகை மோகத்தால் எல்லா



உயிர்களும் உலகத்தில் மயங்கிக் கிடக்கின்றன. [7-27]

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥

அவ்யக்த வடிவாய் நான் இவ்வுலக முழுமையும் பரந்து நிற்கிறேன். என்னில் பூதங்களெல்லாம் நிலை பெற்றிருக்கின்றன. அவற்றினுட்பட்டதன்று என் நிலை. [9-4]

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममाऽऽत्मा भूतभावनः ॥

மற்றொரு வகையில் நோக்குமிடத்து, பூதங்கள் என்னுள் நிற்கவுமில்லை; என் ஆட்சி முறையைப் பார்! உயிர்களை நானே தாங்குபவன். ஆயினும் அவற்றைப் பற்றி நிற்கவில்லை. உயிர்கள் உண்டாவதனைத்தும் என்னாலேயே. [9-5]

பிரகிருதி தர்மப்படி ஜகம் முழுதும் நடைபெற்று வருகிறது. இந்தப் பிரகிருதி தர்மத்தைப் பௌதிக விஞ்ஞான சாஸ்திரிகள் ஆராய்ந்து நிர்த்தாரணம் செய்திருக்கிறார்கள்; இன்னும் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பிரகிருதி தர்மம் எப்படி உண்டாயிற்றென்று விஞ்ஞான சாஸ்திரத்தில் காணமுடியாது. ஒரு கட்டடம், அல்லது யந்திரம் அல்லது உயிருள்ள தேகத்தின் உருவம்,

அங்க அமைப்பு, குணம், வேலைக்கிரமம் இவைகளைப் பரிசோதித்து நிச்சயித்துக் கொடுப்பது விஞ்ஞான சாஸ்திரத்தின் விஷயம். அந்தப் பிரகிருதி நியமம் எப்படி உண்டாயிற்றென்பது அந்தச் சாஸ்திரத்திற்குள் அடங்காது. 'பிரகிருதி விதி' 'இயற்கை நியமம்' முதலியவற்றின் பொருள், 'இயற்கை' என்னும் ஒரு தனிச் சக்தியுண்டு என்றும், அது ஏற்படுத்திய சட்டப்படி பூத பதார்த்தங்கள் நடந்து வருகின்றனவென்பதுமல்ல. நாம் ஆராய்ந்துபார்த்துக் கண்டுகொண்ட அமைப்புக்குச் சங்கிரகமாக நாம் வைத்த பெயர்தான், 'இயற்கை'. அப்படிப் பெயர் வைத்த மாத்திரத்திலேயே மூலகாரணம் கண்டு பிடித்து விட்டபடி யாகாது. ஒரு பெயரே காரணமாகி விடாது. சுரம் வந்தவனுக்குத் தலைவலி உண்டாகிறது. "சுரம் தலைவலி யுண்டாக்கிற்று" என்கிறோம். "காமாலை, கண்ணை மஞ்சள் வர்ணமாக்கிற்று" என்கிறோம். காமாலை என்ற ஒரு பேயோ பூதமோ அம்மாதிரி செய்தது என்றல்ல. காலராவோ, ப்ளேக் சுரமோ, பல பேரைக் கொன்றது என்றால் காலரா என்ற ஓர் அரக்கன் அல்லது ப்ளேக் என்ற ஓர் அசுரன் இத்தனை பேரைத் தனக்கு இரையாக்கிக் கொண்டான் என்பது பொருளல்ல. நாம் கண்ட விஷயங்களைச் சங்கிரகமாகச் சொல்லும் முறையே தவிர, காரியத்திற்குக் காரணத்தைக் கண்டுபிடித்த வகையி லன்று. இது போலவே ஒன்றைப்பற்றி, 'பிரகிருதி விதி'



என்றால், காரணம் கண்டுபிடித்து விட்டோமென்பதன்று. பிரகிருதி தர்மம் என்பதும், ஈசுவர சங்கல்பம் என்பதும் ஒன்றே. ஈசுவர சங்கல்பத்தினால் பிரகிருதி விதி ஏற்பட்டிருக்கிறது. ஈசுவரன் இருக்கிறான் என்று வைத்துக்கொண்டோமானால், பிரகிருதி விதியை அவன் சங்கல்பமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

நம்முடைய வேடிக்கை அல்லது சந்தோஷத்திற்காக ஈசுவரன் தன்னுடைய சங்கல்பத்தை மாற்றமாட்டான். இயற்கை நியதி என்பது அவன் சங்கல்பம். அது தினமும் மாறி மாறி, அதாவது ஒரு நாள் உள்ளது மறு நாளில்லாமல், வியவஸ்தையின்றி, உலகம் நடப்பதைக் கண்டோமானால்தான், ஈசுவரன் என்ற ஒரு சேதனசக்தியுண்டென்று ஒப்புக்கொள்ள முடியும் என்று வாதிப்பது மூர்க்கம். இந்த மூர்க்க எண்ணத்தினால்தான் ஆஸ்திகத்திற்கு ஆதாரமாக எவையேனும் ஆச்சரிய சம்பவங்களையே சில மதஸ்தர்கள் தேடிக்கொண்டிருப்பது. சாதாரணமாய் நாம் தினமும் பார்க்கும் பிரகிருதிதர்மமே பேராச்சரியம். அதுவே போதும், ஈசுவர பக்திக்கு ஆதாரமும் தூண்டுகோலுமாக. இன்று சூரியன் உதித்து, அஸ்தமனமாகி, நாளை மறுபடி உதயமாகாமல் போனாலுங்கூட அதுவும் பிரகிருதி அல்லது இயற்கைத் தருமத்தில் ஒன்றாகச் சேருமேயொழிய, அதுமட்டில் தனித்து நின்று ஆஸ்திக நிதரிசனம் தராது. மழையும்,

மின்னலும், காற்றும், பூகம்பமும் ஒருவாறு நியமம் தவறித்தான் வருகின்றன. ஒருநாளுள்ளபடி மறு நாளில்லே. அதைக் கண்டு திருப்தி யடைகிறோமா? எது நேரிடினும், எது எவ்வகையாகக் காணினும் அவையனைத்தையும் தொகுத்து அதற்கு ஒரு பெயர் நாம் கொடுத்திருக்கிறோம், 'பிரகிருதி' அல்லது 'சுபாவம்' என்று. ஆகையால் திடீர் என்று நூதனமாக நியமம் தவறி நடந்தால் ஒரு லாபமும் இல்லை. 'நியமம்' என்பது புஸ்தகத்தில் எழுதி யிருப்பது அல்ல. இதுவரையில் நடவாத ஒன்றைப் புதிதாகக் காணினும் அதுவும் அந்தப் பிரகிருதி சுபாவ நியமத்தில்தான் சேர்ந்துவிடும்.

ஈசுவரனுடைய சங்கல்பம்: நேரில் தான் நிற்காமல், மறைந்திருந்து சகலமும் காரணகாரிய ரூபமாக நடைபெற வேண்டுமென்று. இதுதான் மேலே எடுத்துச்சொன்ன கீதா சுலோகங்களில், கடைசி இரண்டு சுலோகங்கள்சொல்லுவது. "மறைந்து நிற்கிறான் ஈசுவரன்" என்பதன் பொருள் என்ன? எந்தப் பொருளை ஆராய்ச்சி செய்கிறோமோ அதற்குள் ஆராய்ச்சி செய்கிற நாம் அடங்கி யிருக்கிறோம். ஆராய்ச்சி செய்யப்பட்ட விஷயத்தில் நாமும் நம்முடைய புத்தியும் அடங்கிவிட்டபடியால் இந்த 'மறைவு' ஏற்படுகிறது.

ஒரு மந்திரவாதி ஒரு குளத்தைச் சிருஷ்டித்து அதில் மீன்களும் உண்டாக்குகிறான் என்று வைத்துக்கொள்வோம். தண்ணீரிலுள்ள மீன்கள் அந்தக் குளத்தைச் சுபாவ சிருஷ்டியாகத்தான் நினைக்கும். ஆகாரம் சம்பாதித்துக்கொண்டு ஒன்றும் ஆச்சரியப்படாமல் தம் வாழ்க்கை வியாபாரத்தை நடத்தி வரும். மந்திரவாதியினால் சிருஷ்டிக்கப்பட்ட அதன் புத்திக்கு மந்திரவாதியின் உண்மையும் சங்கல்பமும் எட்டா. திடீரென்று அவன் அக்குளத்தின் நீரை வெந்நீராக்கி மீன்களுக்குத் துக்கம் ஏற்படுத்தினாலுங்கூட மீன்கள் அதற்கு ஒரு காரணம் கண்டுபிடித்துக்கொண்டு சாந்தி யடையும், அல்லது இறக்கும்; அவ்வளவுதான். மந்திரவாதி வெளிப்படை யாகமாட்டான். அல்லது வெந்நீரிலுங்கூட அந்த மாந்திரீக மீன்கள் பிழைத்திருக்குமாறு மந்திரவாதி ஏதாவது செய்தாலும், மீன்களுக்குள் விஞ்ஞான சாஸ்திரிகளாய் ஆராய்ச்சி செய்யும் மீன்கள், அதையும் தங்கள் சுபாவ விதிப் புஸ்தகத்துக்குள் சேர்த்துக்கொள்ளும். இப்படியேதான் ஈசுவரனும் மறைந்து நிற்கிறான்.

எல்லாம் ஈசுவர நியமனத்திற்குட்பட்டு நின்றாலும் காரண காரிய சம்பந்தத்திலிருக்கும் பெரிய சுதந்திரத்தை அனுபவிக்கிறோம். காரணத்திற்கும் காரியத்திற்கும் ஏற்பட்டிருக்கிற மாறாத பந்தம் ஒரு புறம் நமக்குப் பெரும் தடையா யிருந்தாலும் அதுவே நமக்குக் கர்ம சுதந்திரத்தையும் தருகிறது.

ஜகத் சிருஷ்டியும், நடப்பும், ஈசுவரனால்தான்; பிரகிருதி என்பது அவன் கருவியே என்பதை அடியில் வரும் சுலோகங்கள் சொல்லுகின்றன:—

यथाऽऽकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥

எங்கும் இயலும் மகா பலமுள்ள காற்று எப்படி எப்போதும் ஆகாசத்தில் நிலை பெற்றிருக்கிறது? அப்படியே பொருள்களெல்லாம் என்னுள் நிலைபெற்றிருக்கின்றன வென்று அறிவாய். [9-6]

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥

எனக் கடங்கிய பிரகிருதியில் நின்று, மீட்டும் மீட்டும் பூதத் தொகுதி முழுதும் இயற்கையின் பலத்தால் தானாக உண்டாகுமாறு செய்கிறேன். [9-8]

मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनाऽनेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥

என் மேல்பார்வையில் பிரகிருதி சராசர உலகங்களைப் படைக்கிறது. இந்த ஹேதுவால் உலகம் சுழன்று வருகிறது. [9-10]

अहं क्रतुरहं यज्ञः स्वधाऽहमहमौषधम् ।
मन्त्रोऽहमहमेवाऽऽज्यमहमग्निरहं हुतम् ॥

நான் க்ரது, நான் யக்ஞம், நான் ஸ்வதா, நான் ஔஷதம், நான் மந்திரம், நானே நெய், நானே அக்கினி, நானே அவியும். [9-16]



पिताऽहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोङ्कार ऋक् साम यजुरेव च ॥

இந்த ஜகத்தின் தகப்பன் நான்; தாயும் நான்; இதைத் தாங்கி வளர்ப்பவன் நான்; நானே பிதாமஹன். அறியப்படுபொருள் நான். பவித்திரமாக்குபவன் நான். ஓங்காரம் நான்; ருக் ஸாமயஜுஸ்ஸும் நான். [9-17]

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥

இவ்வுலகத்தின் வழியும் நான்; பர்த்தாவும் நான்; பிரபு, சாக்ஷி, இருப்பிடம், சரண், தோழனும் நான். இதன் தொடக்கம், ஸ்தானம், வீடு, அழியாத பீஜமும் நான். [9-18]

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥

நான் வெப்பம் தருவேன். மழையைக் கட்டுவதும் பெய்விப்பதும் நான். நானே அமிர்தம், நானே மரணம். உளதும் நான், இலதும் நான். [9-19]

## 13

## கர்ம யோகம்

[கீதை அத்தியாயங்கள் 2, 4.]

ஹிந்து மதத்தில் மாறுதலுக்கும் சீர்திருத்தத் திற்கும் இடமில்லை என்பது சிலர் எண்ணம். நைந்து போன பழையனவைகளைக் கழிப்பதும் புதியன புகுத்தலும் வைதிக மதத்தில் முடியா என்று சாதாரணமாய் ஹிந்து மதத்தைத் தூஷிப்பது வழக்கம். முன்னோர்களை மதிப்பதும், பழைய நூல் களையும் சாஸ்திரங்களையும் கௌரவித்து நடப்பதும் ஒரு மதத்தின் அபிவிருத்திக்குத் தடையாகா. ஹிந்து தருமம் என்பது மாறுதலும் விருத்தியும் அடையாத ஒரு மதமல்ல. உண்மை எதுவென்று பிரகிருதி சாஸ்திர நிபுணர்கள் எப்படி சத்தியம் ஒன்றிற்கே பத்தப்பட்டு ஆராய்ச்சி செய்கிறார் களோ, அப்படியே வேதாந்தத்திலும் நம்முடைய முன்னோர்கள் ஆராய்ந்தார்கள்.

உண்மையே பிரதானமாகப் புத்தியைப் புற மும் உள்ளும் எவ்வளவு தூரம் செலுத்த முடியுமோ அவ்வளவு செலுத்தி எதையும் தடையாக எண் ணாமல் சத்திய சோதனை செய்து அடைந்த விஷயங் களே வேதாந்தம் என்பது. அதுவே ஹிந்து மதம். பழைய உண்மைகளையும் அநேக நாட்க ளாக உதவிவந்த வழக்கங்களையும் தகுந்த காரண மின்றித் தள்ளிவிடக்கூடாதென்ற மனோபாவ



மானது அபிவிருத்திக்குத் தடையாகாது. உண் மையில் ஹிந்து மதம் மாறி மாறியே வந்திருக் கிறது. புஸ்தகங்களை மாற்ற முடியாது. ஆனால் மனிதர்களுடைய எண்ணங்களும் நம்பிக்கைகளும் சேர்ந்துதான் ஒரு மதமாகின்றன. சேதனமுள்ள மனிதக் கூட்டத்தின் மனத்தோற்றங்கள் மாறுங் கால் அவர்களுடைய மதமும் மாறுதலடைந்துதான் வருகிறது. ஹிந்து மதம் மனிதனுடைய புத்திக் குப் பூரணசுதந்திரம் கொடுத்து வந்திருக்கிறது. எவ்விதத் தடையும் இன்றி, புத்தியைச் செலுத்தி ஆராய்ச்சி செய்யும் சுதந்திரத்தைத் தந்திருப்ப தில், உலகத்தில் வேறு எந்த மதத்தையும் ஹிந்து மதத்திற்கு ஒப்பிட முடியாது.

ஹிந்துக்கள் சாஸ்திரமாகக் கொள்ளும் புரா ணங்கள் ஸ்மிருதிகள் முதலிய நூல்களில் ஒவ்வொன் றும் ஒவ்வொரு விஷயத்தைப் பிரதானமாக வைத் துச் சொல்லும். உண்மைக்குப் பல முகங்கள் உண்டு. ஒவ்வொரு முகத்தை ஒவ்வொரு நூல் ஆராதிக்கிறது. ஹிந்து தர்மத்தை வளர்த்துவந்த மகா பிராக்ஞர்கள் அவரவர்கள் அவ்வப்போது கண்ட உண்மைகளை அவ்வப்போது எழுதிவந்தார் கள். பதினாயிர வருஷக்கணக்காக ஹிந்து தருமம் வளர்ந்து வந்திருக்கிறது. அது மிகப் பழைய ஆல மரம். அதன் நிழலில் நாம் வாழ்கிறோம். ஒரு கிளையைப்போல் மற்றொரு கிளையில்லை. பார்ப் பதற்கு அதிக வேறுபாடுக ளிருக்கும்; ஆனால்

அனைத்தும் சேர்ந்தது ஒருயிர். வித்தியாசங்களைக் கண்டு மயங்கிவிடக் கூடாது.

**ப**கவத் கீதையானது ஹிந்து மதத்தில் அனைவரும் ஒப்புக்கொண்டு மதிக்கும் நூல். இதை எல்லா ஸம்பிரதாயங்களைச் சேர்ந்தவர்களும் சாஸ்திரமாக அங்கீகரிக்கிறார்கள். இந்தப் பகவத் கீதையினால் இரண்டு முக்கியமான விஷயங்களில் ஹிந்து மதம் புத்துயிர் அடைந்ததாகச் சொல்லலாம். ஒன்று: கேவலம் யாகாதிக் கிரியைகளுக்கு, அதாவது வைதிக வேள்வி மார்க்கத்திற்கு, பிராதான்யம் குறைந்தது. இரண்டாவது: துறவு மார்க்கம் ஒன்றே மோக்ஷசாதனம் என்ற அபிப்பிராயமும் திருத்தப்பட்டது. வாழ்க்கைக்கு வேண்டிய காரியங்களை நடத்தியே தருமத்தில் நிற்கலாம் என்ற உண்மையைக் கீதை நன்றாக ஊர்ஜிதப்படுத்திவிட்டது. சமுதாய க்ஷேமத்திற்கு வேண்டிய காரியங்கள் நடைபெற வேண்டுமென்று, அந்தக் காரியங்களில் அவனவன் தனக்கு ஏற்பட்ட கடமைகளைச் சரிவரச் செய்து முடிப்பதில் மோக்ஷத்திற்குத் தடை ஏற்படாதென்றும், அதுவே கர்ம பந்தத்தினின்று விடுபடுவதற்கு வழியென்றும் கீதை வற்புறுத்தி உபதேசித்திருக்கிறது.

தருமநெறியில் நிற்பவன் தனக்குச் சமுதாயத்தில் என்ன வேலை இடப்பட்டிருக்கிறதோ அதை நிறைவேற்ற வேண்டும். தன் சுபாவ குணத்தி



னாலேயோ, தான் பிறந்த குலம், குடும்பம், அமர்ந்த ஸ்தானம் முதலிய காரணங்களினாலேயோ, தனக்கு ஏற்பட்டிருக்கும் காரியங்களை யெல்லாம் சரிவரச் செய்ய வேண்டும். ஆனால் அக்காரியங்களினால் தனக்காகவே சுகமோ லாபமோ அடையவேண்டுமென்ற விருப்பங்கொண்டு செய்யக்கூடாது. 'என் கடமையை நான் செய்யவேண்டும்' என்ற எண்ணம் தவிர, மனதில் காரியத்தின் பயனைப்பற்றித் தனக்காக ஓர் ஆசை வைத்துக்கொள்ளக் கூடாது. வெளிப்பார்வைக்கு ஆசை வைத்தும் லாபம் கருதியும் மற்றவர்கள் செய்வதுபோலவே கர்ம யோகியும் தான் செய்யும் காரியத்தில் கண்ணும் கருத்தும் வைத்துச் செய்வான்; உதாசீனமாக இருக்க மாட்டான். மற்றவர்களைப்போல் வெளிப்பார்வைக்குத் தோன்றினாலும், உள்ளத்தில் காரியத்தின் பலனுக்கும் இவனுக்கும் ஆசை என்கிற பந்தம் இல்லாமல் தனிப்பட்டு நின்றே வேலை செய்வான். சுயநலங் கருதாமல் கடமைகளைச் செய்வதுடன், காரியம் சித்தியானால் மகிழ்ச்சியின் மயக்கமும், சித்தி யாகாமற்போனால் துயரமும் அடைவது கிடையாது. காரியத்தில் கஷ்டங்களும், தடைகளும் ஏற்பட்டால், அவைகளை எப்படித் தாண்டுவது என்று மாத்திரம் யோசித்துச் செய்வானே யொழிய, அவைகளுக்காகத் துக்கப்பட்டு மனங்கலங்கமாட்டான். சுயநலம் கருதாதவனுக்கு இந்தச் சாந்தம் தானாக வரும். சுகமும் துக்கமும், ஜயமும் அபஜயமும் அவனைத் தீண்டா.

இப்படிப் பற்றற்றுக் கடமையைச் செய்யப் பழகிக்கொண்ட இல்லறத்தான் யோகத்தில் மேலே ஏறவேண்டிய படிகளில் ஏறும் சக்தி சீக்கிரத்தில் அடைவான். அடிக்கடி ஆழ்ந்து சிந்தித்து, மனதை ஏகாக்கிரப்படுத்தி, இந்திரியங்களையும் மனதையும் விஷயங்களில் திரியவிடாமல் அடக்கிக்கொண்டு, தியானம் செய்வான். அப்படித் தியானம் செய்வதனால், ஞானம் பெறுவான். அந்த ஞானத்தினால் எல்லா ஜீவன்களிலும் தன் ஆத்மாவைக் காண்பான்; அனைத்தும் பகவான் திருவுள்ளத்தில் நிற்பதையும் காண்பான்.

கீதையில் சொல்லப்பட்ட மார்க்கம் லோக வியவகாரத்தை நடத்திக்கொண்டே தன் உள்ளத்தை மட்டும் பற்றறச் செய்துகொள்ளும் மார்க்கம். காரியம் செய்வதை விட்டுவிடுவது உண்மைத் துறவு ஆகமாட்டாது. காரியத்தின் பலன்களின்மேல் ஆசை செலுத்தாமல் பலனில் பற்றைத் துறப்பதே துறவு. மோக்ஷம் அல்லது விடுதலைக்கு வழி, காரியப் பிரவிருத்திகளில் சுயநலப் பற்றையறுத்து ஆத்மாவை விடுவித்துக்கொள்வதே. அந்தச் சுயநலப் பற்று அறுந்தபின் எந்தக் காரியம் செய்தாலும் அது ஆத்மாவைக் கரும பந்தத்தில் கட்டாது. இதுவே கீதாஸாரம். இப்படிச் சுயநலம் கருதாமல் ஜயாபஜயங்களில் மனமாறுதல் ஏற்படாமல், பற்றற்று அவனவன் தன்தன் கடமையைச் செலுத்தினால், கர்மயோக மார்க்கத்திற்கும் ஸந்நியாஸ மார்க்கத்திற்குமுள்ள வித்தியாசம் கரைந்துபோகிறது.



किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥

எது கருமம், எது அகருமம் என்ற விஷயத்தில் பண்டிதர்களும் மயங்குகிறார்கள். ஆதலால் உனக்குக் கருமத்தின் இயல்பை உணர்த்துகிறேன். இதைத் தெரிந்துகொண்டு தீங்கினின்றும் விடுபடுவாய். [4-16]

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥

செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் எவன் உணர்கிறானோ, அவனே மானிடருள் அறிவுடையோனாவான். எல்லா வேலைகளும் செய்துவந்தாலும் அவன் யோகத்தில் பொருந்தினவனாவான். [4-18]

यस्य सर्वे समारम्भाः कामसङ्कल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥

எவனுடைய வேலைகளெல்லாம் ஆசையால் தூண்டப் படாமல், ஞானம் என்ற அக்கினியால் சுடப்பட்டவைகளா யிருக்கின்றனவோ, அவனைத்தான் பெரியோர் அறிவுடையானாகக் கருதுவர். [4-19]

यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वाऽपि न निबद्ध्यते ॥

தானாக வந்து எய்தியதைக் கொண்டு சந்தோஷமுறுவோனாகி, துக்கந் தருவன சுகந் தருவன வென்ற வேற்றுமையைக் கடந்து, காரியசித்தி பெற்றாலும் பெறவில்லையாயினும் சமநிலை பெற்றோனாகி, மனதில் குறைகளுக்கு இடந்தராதவனாகி நின்ற ஒருவன், கருமம் செய்தாலும், அதனால் கட்டுப்படுவதில்லை. [4-22]

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥

தொழில் செய்ய மட்டுமேதான் உனக்கு அதிகாரம். அதன் பயன்களில் எப்போதுமே உனக்கு அதிகாரமில்லை. செய்வதன் பயனைக் கருதாதே. ஆனால், தொழில் செய்யாம விருப்பதில் விருப்பங் கொள்ளாதே. [2-47]

योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥

யோகமுறையில் நின்று, பற்றை நீக்கி, எண்ணம் நிறைவேறுவதும் நிறைவேறாததும் ஒன்றெனக் கருதி, தொழில்களைச் செய். இந்தச் சமபுத்தியே யோகமெனப்படும். [2-48]

## 14

## கர்மயோகமே வேள்வியும்

[கீதை அத்தியாயங்கள் 4, 5, 6.]

வேதத்தில், யக்ஞம் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. யக்ஞம் அல்லது வேள்வியின் முக்கிய அம்சம், தியாகம். சுயநலத்தையும் ஆசையையும் விடுவதே வேள்வியின் சாரம். ஆகையால் வேள்வி யென்பது பலவிதத்தில் செய்யக் கூடிய தெய்வப் பணி. இப்படிப் பலவிதத்தில் செய்யப்பட்ட வேள்விகளுக்கும் வேதத்தில் சொல்லப்பட்ட பலனுண்டு. மோக்ஷத்தை விரும்புகிறவன் காரியம் செய்வதை விட்டுவிட்டுச் சும்மா கிடக்க வேண்டும் என்று தவறாக எண்ணாமல், சகல காரியங்களையும் வேள்வி ரூபமாகவே செய்து கொண்டு விடுதலை பெறலாம். சுயநலப் பற்றற்றுச் செய்யப்பட்ட கடமை வேள்வியேயாகும்.

यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥

வேள்வி செய்து மிகுந்தது அமிழ்தாகும். அதை உண்போர் மாறாத பிரமபதத்தை எய்துகிறார்கள். வேள்வி செய்யாதோருக்கு இவ்வுலகமில்லை. அப்படியிருக்க அவர்களுக்குப் பரலோகம் எது? [4-31]

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥

வேதங்களில் பலவித வேள்விகள் விவரித்துக் காட்டப்பட் டிருக்கின்றன. அவையெல்லாம் தொழில் செய்துதான் உண்டாகும். இதை உணர்ந்தால் வீடு பெறுவாய். [4-32]

श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परन्तप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥

வேள்விப் பண்டங்களைக் கொண்டு செய்யப்படும் வேள்வியைக்காட்டிலும் ஞானத்தால் செய்யும் வேள்வி சிறந்தது. எத்தகைய கிரியையும் ஞானத்தில்தான் முடிவுபெறுகிறது. [4-33]

ஞானயக்ஞம் என்பது ஞானத்தால் செய்யப்பட்ட வேள்வி. நெய் முதலிய திரவியங்களில்லாமல் ஞானம் என்ற திரவியத்தைக்கொண்டு செய்யப்படுவது ஞானயக்ஞம். அதாவது உலக வாழ்க்கைக்கு வேண்டிய கடமைகளைப் பற்றற்றுச் செய்வது. எந்தக் கருமம் செய்யினும் அக்கருமத்தின் பலனைப்பற்றி ஆசை கொள்ளாமல் மனதை நிதானப் படுத்துவதே ஞானம். இதனால் வரவர வேற்றுமை யுணர்ச்சி கரைந்து, சகல ஜீவன்களிலும் தன்னுடைய ஆத்மா நிற்பதை ஒருவன் காணுவான். அப்படியே எல்லா ஜீவன்களும் பரமாத்மாவில் அடங்கி நிற்பதையும் காணுவான். இதைக்



காணக்காண, பற்றற்று வேலை செய்வதும் எளிதாகும். கருமம் செய்யும்போது அதைத் தூண்டும் நோக்கத்தைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டோமானால் பாபமும் கரும பந்தமும் நம்மைச் சேரா. இப்படிப் பரிசுத்த நோக்கத்தைக் கொள்ளச் செய்வதே ஞானம்.

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥

நன்கு கொளுத்துண்ட அக்கினி, விறகுகளைச் சாம்பராக்கி விடுதல்போல, ஞானத்தீயானது எல்லாக்கருமங்களையும் சுட்டு நீறாக்கி விடும். [4-37]

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥

ஞானத்தைப் போல், எதையும் பவித்திரமாக்கும் பொருள் இவ்வுலகத்தில் வேறேதுமில்லை. யோகத்தில் நல்ல பழக்கமடைந்தவன் தக்க பருவத்தில் இந்த ஞானத்தைத் தானாகவே அடையப் பெறுவான். [4-38]

योगसंन्यस्तकर्माणं ज्ञानसञ्छिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥

யோக வழியைக்கொண்டு தான் செய்யும் கருமங்களில் பற்று என்பதை அறுத்து, ஞானத்தைக்கொண்டு ஐயம் என்பதை வெட்டித்

தள்ளி, தன்னைத் தான் காத்துக்கொண்டவனைக் கருமங்கள் கட்டுப்படுத்த மாட்டா.[4-41]

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनाऽऽत्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥

ஆகையால், அஞ்ஞானத்தால் இதயத்தில் தோன்றும் ஐயத்தை ஞானவாளால் வெட்டித் தள்ளி, யோகம் என்ற பற்றற்ற நிலையில் நின்று, கருமங்களைச்செய்ய எழுந்து நில்.[4-42]

இந்த ஞானத்தை நாம் அடைந்த பின், ஸாங்கிய மார்க்கத்திற்கும் யோக மார்க்கத்திற்கும், அதாவது, அறிவு வழிக்கும் புலனை யடக்கும் வழிக்கும் உள்ள வேற்றுமை ஒழிந்து விடுகிறது. ஞானமும் கர்மமும் சேர்ந்தால் கர்மயோகம். ஸந்யாஸமும் பற்றின்றித் தொழில் செய்யும் கர்மயோகமும் உண்மையில் ஒன்றேயாகும்.

साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥

ஸாங்கியத்தையும் யோகத்தையும் வெவ்வேறென்று சொல்லுவோர் அறியாக் குழந்தைகள். அறிந்தோர் அங்ஙனம் கூறார். இவற்றில் யாதேனுமொன்றில் நன்கு நிலைபெற்றோன் இரண்டின் பயனையும் எய்துகிறான். [5-4]



अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥

செய்கையில் தனக்கென்று பலனை எதிர்பாராமல், செய்யவேண்டியதைச் செய்வோனே துறவி; யோகியும் அவனே. தீ வளர்க்காதவனும் தொழில் செய்வதை விட்டவனுமல்ல. [6-1]

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्तसङ्कल्पो योगी भवति कश्चन ॥

எதனை ஸந்யாஸமென்கிறார்களோ, அதுவே யோகம் என்று தெரிந்துகொள். இதை நான் அடைய இதைச் செய்வேன், அதை நான் அடைய அதைச் செய்வேன், என்ற எண்ணங்களைத் துறவாத எவனும் யோகி ஆகமாட்டான். [6-2]

# 15

## கர்மயோகமே துறவும்

[கீதை அத்தியாயங்கள் 5, 18.]

ஒருவன் சுயநல நோக்கமும் ஆசைப்பற்றும் நீக்கிக்கொண்டு உலகம் முழுவதும் ஒன்றே என்னும் ஞானத்தை அடைந்துவிட்டபின் சகல லௌகிக கருமங்களையும் செய்துகொண்டே யிருப்பினும் அவன் ஸந்யாஸியே யாவான்.

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥

யோகத்தைத் தழுவி ஆத்மசுத்தி யடைந்தவன், தன்னைத்தான் வென்றவன், ஜிதேந்திரியன், எல்லா உயிர்களும் தானேயானவன், தொழில்கள் செய்துகொண்டிருப்பினும் அவை அவனைத் தீண்டுவதில்லை. [5-7]

कायेन मनसा बुद्धया केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वाऽऽत्मशुद्धये ॥

யோகிகள் சுயநலப்பற்றைக் களைந்துவிட்டு ஆத்ம சுத்தியின் பொருட்டாக உடம்பாலும், மனதாலும், புத்தியாலும், கேவலம் இந்திரியங்களாலுங் கூடத் தொழில் செய்வார்கள். [5-11]

கருமங்களைப் பற்றில்லாமல் செய்யப் பார்ப்பது, துறவு மார்க்கத்தைக் காட்டிலும் மேலான



வழியென்று கீதையில் பலவிடங்களிலும் பலவாறாக இடைவிடாமல் வற்புறுத்திச் சொல்லப்படுகிறது. கடைசி அத்தியாயத்திற்குப் பெயர் 'ஸந்யாஸ யோகம்' என்று சொல்லி யிருப்பினும் அந்த அத்தியாயம் ஆரம்பிக்கையிலேயே பகவான் சொல்லுகிறார்:

काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।
सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥

பலன்களை விரும்பிச் செய்யப்படும் கருமங்களைத் துறப்பதே துறவுநிலை என்று அறிஞர்கள் அறிவார்கள். செயல்களின் பலன்களை முற்றிலும் துறத்தலே தியாகம் என்றும் அவர்கள் கூறுவர். [18-2]

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥

செய்யவேண்டிய கருமத்தைத் துறத்தல் தகாது. மதிமயக்கத்தால் அதனை விட்டுவிடுதல் தமோகுணத்தால் நேர்வது என்ப. [18-7]

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्त्विको मतः ॥

நியமிக்கப்பட்ட கருமத்தைச் செய்யும் பொழுது இது செய்தற்குரியது என்று செய்து பற்றையும் சுயநல எண்ணத்தையும் ஒருவன்

விட்டு விடுவானாயின், அந்தத் தியாகமே சாத்விக மெனப்படும். [18-9]

न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥

உடம்பெடுத்தவனால் செய்கைகளை முழுதுமே விட்டுவிட முடியாது. எவன் செய்கைகளின் பயனைத் துறக்கிறானோ அவனே தியாகியெனப்படுவான். [18-11]

இதையே நன்றாக வற்புறுத்தி, லோகநாதனுடைய இஷ்டத்திற்கு எல்லாவற்றையும் விட்டு விட்டு, அவன் அருளையே நம்பிச் சகலத்தையும் அவனுக்கு அர்ப்பணமாகச் செய்யவேண்டுமென்பது அடியில் கண்ட முக்கியமான சுலோகங்களில் சொல்லப்படுகிறது :

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥

என்னையே சார்பாகக் கொண்டோன் எல்லாத் தொழில்களையும் எப்போதும் செய்து கொண்டிருந்தாலும், அழிவற்ற, நித்ய பதவியை எனதருளால் எய்துகிறான். [18-57]

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥

செய்யும் செயல்களை யெல்லாம் எனக்கென மனதில் துறந்துவிட்டு, என்னில் முற்றும் ஈடுபட்டு, புத்தியோகத்தை ஆச்ரயித்து எப்போதும் என்னைச் சித்தத்தில் கொண்டிரு. [18-57]

# 16

## அமைதியற்ற துறவு

[கீதை அத்தியாயம் 3.]

மனம் அமைதியடைய அடிக்கடி தியானம் செய்ய வேண்டியது அவசியம். ஆத்மா, உலகம், கடவுள் இவைகளின் சொரூபத்தை ஆழ்ந்து சிந்திப்பதினால் மனதில் கிளம்பும் உத்வேகங்கள் அடங்கும். ஆனால் தியானம் மட்டும் போதாது. அதனுடன் தனக்கு ஏற்பட்ட கடமைகளைச் செய்வதும், அப்படிக் கருமம் செய்வதில் சுயநல ஆசைப்பற்றுகளின்றி செய்வதும், மன அமைதிக்கு இன்றியமையாத வழியாகும். யோகம் என்று தியானத்திற்கும் பெயர் வழங்கி வருகிறது. கர்ம யோகம் என்பது பற்றற்று ஞானத்துடன் கருமம் செய்வது. சரிவரச் செய்தால் இரண்டும் ஒன்றே என்பது காண்போம். அவைகளில் ஒன்றின்றி மற்றொன்று செய்யப்புகுவதில் பயனில்லை என்பதையும் காண்போம்.

பக்குவப்படாத மனதுடன் துறவியாய்ப் போகப்பார்ப்பதில் பயனில்லை. அதனால் மன அமைதி உண்டாக மாட்டாது. துறவின் பெருமையும் முக்கிய அம்சமும் ஆசைகளை நீப்பதே. ஆசைகளை நீக்கிக் கருமம் செய்யலாமல்லவா? அப்படிச் செய்வதும் துறவே. ஆகையால் ஸந்யாஸமும் கர்மயோகமும் ஒன்றேயென்று பகவத் கீதை சொல்லுகிறது.

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयाऽनघ ।
ज्ञानयोगेन साङ्ख्यानां कर्मयोगेन योगिनाम् ॥

இவ்வுலகத்தில் இரண்டுவித நிஷ்டை முன்னர் என்னால் கூறப்பட்டது. ஸாங்கியர்கள் சொல்லும் ஞானயோக முறையும், யோகிகள் சொல்லும் கர்மயோக முறையும். [3-3]

न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥

தொழில்களைத் தொடங்காம லிருப்பதனாலேயே மனிதன் செயலற்ற நிலையடைவதில்லை. துறவு பூணுவதனாலேயே மனிதன் ஈடேற்றம் பெற்றுவிடமாட்டான். [3-4]

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥

எவனும் ஒரு கணப்பொழுதேனும் செய்கையின்றி இருப்பதில்லை. இயற்கையில் விளையும் குணங்களே எல்லா உயிர்களையும் தம்மையறியாமல் தொழில் புரிவிக்கின்றன. [3-5]

कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।
इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥

கர்மேந்திரியங்களை அடக்கிக் கொண்டு, ஆனால் இந்திரிய விஷயங்களை மனதால் ஸ்மரித்துக்கொண்டிருப்போன் மூடன். அவனுடைய



ஒழுக்கம் பொய் யொழுக்கம் என்று சொல்லப்படும். [3-6]

यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥

எவன் இந்திரியங்களை மனதால் கட்டுப்படுத்திப் பற்றின்றி, கர்மயோக முறையில் கர்மேந்திரியங்களைச் செலுத்துகிறானோ, அவனே சிறந்தவன். [3-7]

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्राऽपि च ते न प्रसिध्येदकर्मणः ॥

விதிக்கப்பட்ட தொழிலைச் செய். தொழிலின்மையைக் காட்டிலும் தொழில் சிறந்தது. தொழிலின்றிச் சரீர யாத்திரையுங்கூட உனக்கு இயலாமல் போய்விடும். [3-8]

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥

வேள்வியாகச் செய்யப்படுவதுதவிர மற்றத் தொழில் மனிதருக்குத் தளையாகிறது. ஆதலால் பற்றைக் களைந்து தொழில் செய்துகொண்டிருப்பாயாக. [3-9]

மனதில் வைராக்கியபுத்தி புகுந்தவுடன், உலக வாழ்க்கையைத் துறப்பதே நலம் என்ற மனோபாவம் உண்டாகிறது. பழைய உபதேசங்களும்

அநேகமாய் இத்தகையனவே. கீதையோ, பக்குவ மற்ற துறவைக் கண்டித்து வேறு வழிகாட்டி யிருக்கிறது. இதுவே கீதையின் சிறப்பு.

பூர்வ கர்ம பலனைச் சில குணங்களுடன் பிறக்கிறோம். அக்குணங்களைப் பலாத்காரமாக அடக்குவதில் பயனில்லை. மனம் பக்குவப்படாதிருக்கும் போது குணங்களுக்கு வெளிச் செல்ல வழிவிடாமல் அடக்குமுறை ஆரம்பித்தால், அவை உள்ளே வேலை செய்துகொண்டே போகும். காமக்குரோதாதி வேகங்கள் மனதைக் கலக்கிக் கொண்டேயிருக்கும். வெளியில் சுத்தமும் உள்ளே அசுத்தமும் கொண்டிருப்பதில் யாதும் பயனில்லை. இது புறத்தாரை மோசம் செய்வதோடு தன்னையும் மோசம் செய்து கொள்வதாகும். சுயநலமின்றிப் பற்று நீக்கிக் கடமைகளைச் செய்யும் முறையே, ஜன்மாந்தர கர்மத்தினுலுண்டா யிருக்கும் சுபாவ குணங்களினின்று ஜீவனை விடுவித்துக்கொள்ளும் முறையாகும்.

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहङ्कारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥

எவ்வகையிலும் பிரகிருதியின் குணங்களால் செய்கைகள் செய்யப்படுகின்றன. அஹங்கார உணர்ச்சியின் மயக்கத்தால், தான் செய்வதாக ஆத்மா நினைத்துக்கொள்ளுகிறது. [3-27]



तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥

குணம், கருமம் இவைகளின் பாகுபாடுகளை யறிந்தோன், குணங்கள் குணங்களில் இயலுகின்றன வென்று கருதி, பற்றற்றிருப்பான். [3-28]

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ।

ஞானவானுங்கூடத் தன் பிரகிருதியின்படியே நடக்கிறான். உயிர்கள் அனைத்தும் பிரகிருதியைப் பின்தொடர்ந்து செல்லுகின்றன. அடக்குதல் பயன்படாது. [3-33]

# 17

## கர்மயோகமும் வாழ்க்கை நலமும்

[கீதை அத்தியாயம் 3.]

வேறு காரணமிருந்தாலும் இல்லாவிட்டாலும், லோக ஸங்கிரகத்திற்காகவாவது நாம் கருமத்தைச் செய்தே தீரவேண்டும். உலக வாழ்க்கைக்கு வேண்டிய கருமத்தை என்றும் விடக்கூடாதென்று பகவான் கீதையில் வற்புறுத்துகிறார். "நீ வாழ்க்கையை நீத்தால் மற்றவர்களும் அதே தர்மத்தைத் தான் அனுசரிப்பார்கள். நீ எதை நலமென்று கருதுகிறாயோ அதுவே மற்றவர்களுக்கும் பிரமாணமாகும். நீ மட்டில் துறவியாகி, மற்றவர்கள் உலகத்தை நடத்துவார்களென்று எதிர் பார்க்கக் கூடாது" என்றார். ஆகையால் லோக நன்மைக்காக, ஞானம் அடைந்தவனும் கர்மங்களைச் செய்ய வேண்டும் என்பது சித்தாந்தம். கீதையானது உலக வாழ்க்கையை நன்றாகக் கவனித்துச் செய்யப்பட்ட தருமோபதேசம். "மாபெரும் ஞானிகளான ஜனகன் முதலானோரே கருமம் செய்யும் முறையை அனுஷ்டித்தார்களென்றால் உனக்கு வேறு வழியுண்டோ?" என்கிறார் பகவான்.

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसङ्ग्रहमेवापि सम्पश्यन्कर्तुमर्हसि ॥

ஜனகன் முதலியோர் கருமஞ் செய்தே சித்தி பெற்றார்கள். உலக வாழ்க்கை நலத்



தைக் கருதியாவது நீ தொழில் புரிதல் தகும். [3-20]

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥

எதனை உயர்ந்தோன் செய்கிறானோ, அதையே மற்ற மனிதர் பின்பற்றுகிறார்கள். அவன் எதைப் பிரமாண மாக்குகிறானோ, அதையே உலகத்தார் தொடருகிறார்கள். [3-21]

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।
कुर्याद्विद्वांस्तथाऽसक्तश्चिकीर्षुर्लोकसङ्ग्रहम् ॥

அறிவடையாதார் பயனிலே பற்று வைத்து எவ்வாறு தொழில் செய்கிறார்களோ அவ்வூக்கத்துடனே அறிவடைந்தவன் பற்றை நீக்கி உலக நலத்தை நாடித் தொழில் செய்ய வேண்டும். [3-25]

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥

பற்றுதல்கொண்டு தொழில் செய்யும் அஞ்ஞானிகளுக்கு அறிவடைந்தவன் புத்தி பேதம் விளைவிக்கக் கூடாது. தான் யோக மார்க்கத்தில் நின்று தொழில்செய்து மற்றவர்களும் எல்லாத் தொழில்களிலும் மகிழ்ச்சி

யுடன் கலந்து கொள்ளுமாறு செய்யவேண்டும்.

[3-26]

प्रकृतेर्गुणसम्मूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥

இயற்கைக் குணங்களால் மயங்கியவர்கள் குண கர்மங்களில் பற்றுதல் அடைகின்றார்கள். சிற்றறிவுடைய அந்த மூடர்களை முழுதுணர்ந்த ஞானி புத்தி தடுமாறச் செய்யக்கூடாது.

[3-29]

# 18

## மனதைக் காத்தல்

[கீதை அத்தியாயங்கள் 2, 3, 16, 18.]

இவ்வாறு கீதையில் செய்யப்பட்ட உபதேசமானது உலக வாழ்வைத் துறக்க மனமில்லாதவர்களுக்காக ஒருவித சமாதானமாகவோ, ஆறுதலாகவோ சொல்லப்பட்ட யுக்திவாதமல்ல. உண்மையில் எல்லா ஆண் பெண்பாலரும் தம் வாழ்வை இந்த முறையில் நடத்தி, எந்தக் கருமத்தையும் சுயநல நினைவேயில்லாமல் ஜனசமூக நன்மைக்காகவே மன அமைதியுடன் செய்வதைப் பழக்கிக் கொள்வதற்காகக் கீதையிலுள்ள உபதேசம் ஏற்பட்டது. பழகப்பழக எதுவும் ஒருவனுக்கு சுபாவமாகி விடுகிறது. பற்றற்றுக் கருமம் செய்வதும் இப்படியே அப்பியாசத்தால் சுபாவமாகும்.

செய்யும் கருமத்தை நன்கு முடிப்பதற்கும் இதுவே முறையாகும். பற்றும் ஆசையும் மனதில் கவலையையும் பயத்தையு முண்டாக்குகின்றன. ஜயாபஜயக் கவலையினால் புத்தி சாதுர்யமும் குறைகிறது. ஆகையால் பற்றற்றுச் சுயநலம் நீக்கிக் கருமம் செய்வதே கருமங்களை நன்கு முடிக்கும் வழி. தண்ணீரில் நீந்தும் வாத்து தண்ணீரை விட்டு வெளிவந்ததும் தன் சிறகிலிருந்து தண்ணீரை எளிதில் உதறிவிடுவதுபோல், கருமம் செய்யும்போது கண்ணுங் கருத்தும் வைத்து, காரியம்

தீர்ந்தபின், பற்றோ ஜயாபஜயக் கவலையோ இல்லாமல் செய்துகொள்ள வேண்டும். உலக வாழ்வில் கலக்கும்போது, இவனைவிடக்கவனமும், சுறுசுறுப்பும், சாமர்த்தியமும், கொள்ளமுடியாது என்று பார்ப்பவர்கள் நினைக்குமாறு, சுத்தமாகவும் சுறுசுறுப்பாகவும் வேலைகளைச் செய்யவேண்டும். விட்டபின் அதன் பலன்களைப் பற்றிக் கவலையே இருக்கக் கூடாது. இந்த நிலையை அடையப் பழக்கம் வேண்டும். முக்கியமாக, மனோவேகங்களை அடக்கும் முறையை அப்பியசிக்கவேண்டும்.

மனச்சாந்திக்குச் சத்துருப்படை, காமம், குரோதம், லோபம். கர்மயோகத்துக்கு வேண்டிய மனத் தூய்மையும் பற்றற்ற நிலையும் அடைய விரும்பினால், இந்தச் சத்துருக்களுக்கு இடம் தராமல் எப்போதும் ஜாக்கிரதையாக மனதைக் காக்கவேண்டும். மனதைச் சரியாகக் காத்தோமானால் மற்றவையனைத்தும் எளிதாகும். நன்மை தீமை இரண்டுக்குமே மனதில் புகும் எண்ணங்களே காரணம். மனதை அடக்கியாளாமல் விட்டுவிட்டோமேயானால், பிறகு நிச்சயமாய் ஏமாந்து போவோம். ஆசையெண்ணங்களைக் கோட்டைக்குள் புகவிட்டால், அவை பிறகு நம்மை ஆட்கொண்டுவிடும்; இந்திரியங்களில் இடம் பண்ணிக்கொண்டுவிடும்; மனதைக் கவர்ந்து, புத்தியைக் கெடுத்து, ஆத்மாவைப் பள்ளத்தில் தள்ளிவிடும். ஆகையால் கோட்டை வாயிலைப் பலமாக அடைக்கவேண்டும். கெட்ட எண்



ணங்களை, இவை எண்ணங்கள் தாமே என்று அலட்சியம் செய்யாமல் அப்புறப்படுத்தியே வைக்கவேண்டும்.

अर्जुन उवाच ।

अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।

अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥

அருச்சுனன் கேட்கிறான் :—

பாவம் செய்ய இச்சையில்லாத போதும் மனிதனை வலியக்கொண்டு பாவத்தில் புகுத்துவது யாது? [3-36]

श्रीभगवानुवाच ।

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।

महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறார் :—

அது ரஜோகுணத்திலிருந்து கிளம்புகிறது. அதுவே காமம். அதுவே சினம். அஃது அளவு கடந்த இரை கேட்கும். மிகவும் தீங்கிழைப்பது. வாழ்விற்குச் சத்துரு அதுவே என்றறிவாய். [3-37]

धूमेनाऽव्रियते वह्निर्यथाऽऽदर्शो मलेन च ।

यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥

இது, தீயைப் புகை சூழ்வது போலவும், கண்ணாடியை அழுக்கு மாசுபடுத்தி மூடுவது

போலவும், கர்ப்பத்தைக் கர்ப்பப்பை மூடி நிற்பது போலவும், அறிவைச் சூழ்ந்துகொண்டு வேலை செய்யவொட்டாமல் தடுக்கிறது. [3-38]

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥

ஞானவானின் நித்யவைரியான இது, எவ்வளவு விறகு போட்டாலும் எரிக்கும் தீயைப்போன்றது. இது ஞானத்தைச் சூழ்ந்து கொண்டு அதைக் கெடுக்கிறது. [3-39]

इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥

இந்திரியங்களும், மனமும், புத்தியும் இதற்குத் தங்குமிடம் என்று சொல்லப்படுகின்றன. இவற்றைக் கொண்டு இது ஞானத்தைச் சூழ்ந்து ஜீவனை ஏமாற்றுகிறது. [3-40]

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥

ஆதலால் தொடக்கத்திலேயே இந்திரியங்களைக் காத்து, ஞானத்தையும் பகுத்தறிவையும் அழிப்பதாகிய இந்தக் கொடிய சத்துருவைக் கொல்லுவாயாக. [3-41]

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥



ஆத்மநாசத்துக்குக் காரணமான காமம், குரோதம், லோபம் ஆகிய இம்மூன்றும் நரகத்திற்கு வாயில்கள். ஆதலால் இம்மூன்றையும் ஒழித்து விடுக. [16-21]

एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।
आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥

இந்த மூன்று இருள்வாயில்களினின்றும் விலகிநிற்பவன், தன் ஆத்மாவின் நலத்தைத் தேடிக் கொள்கிறான். அதனால் பரகதி அடைகிறான். [16-22]

यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥

அறிவும், தவமுயற்சியு மிருந்தாலுங்கூட இந்திரியங்கள் மனதை வலிய வாரிச் சென்று விடுகின்றன. [2-60]

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

அவற்றை நன்றாக அடக்கி, யோகத்தில் நிலைகொண்டு, மனதை என்னிலேயே செலுத்தி, புலன்களை வசப்படுத்தி வைத்திருப்பவனையே நிலைகொண்ட ஞானம் படைத்தவனாகக் கொள்ளலாம். [2-61]

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥

மனிதன் விஷயங்களைக் கருதும்போது அவற்றில் அவனுக்குப் பற்றுண்டாகிறது. பற்றுதலால் விருப்பமுண்டாகிறது. விருப்பத்தால் சினம் உண்டாகிறது. [2-62]

क्रोधाद्भवति सम्मोहः सम्मोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥

சினத்தால் மயக்கமும், மயக்கத்தால் நினைவுத் தவறுதலும் உண்டாகி, நினைவுத் தவறுதலால் புத்தி அழிந்துவிடுகிறது; புத்தி அழிந்ததும் மனிதன் நாசமடைகிறான். [2-63]

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥

ஒருவனுடைய இந்திரியங்கள் வெளிச் செல்லுகையில் அவன் மனமும் அவற்றைப் பின்பற்றிச் செல்லும். கடலில் புயல்காற்றில் தத்தளிக்கும் கப்பலைப்போல அவனுடைய மதி அடிபட்டு அலையும். [2-67]

**மு**தலில் ஆசை மனமகிழ்ச்சிகள் அமிருதம் போலிருக்கும்;பின்பு விஷமேயாகும். இவை மனிதனுக்கு உண்மைச் சுகம் தரா; துக்கமாகத்தான் முடியும். புலன்களையும் மனதையும் அடக்குதல்



முதலில் விஷம்போல் கசக்கும். ஆனால் அம்மருந்தே பின்பு ஞானத்தால் உதிக்கும் அமிருதம் போன்ற சுகானந்தத்தைத் தரும்.

सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।
अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥
यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥

எதனிலே ஒருவன் பயிலப் பயில மனதில் மகிழ்ச்சி உண்டாகிறதோ, எதனிலே துக்கத்தின் உண்மை முடிவு காண்கிறானே, [18-36]

எது தொடக்கத்தில் விஷத்தைப் போலும், முடிவில் அமிர்தத்தைப் போலும் ஆகிறதோ அந்த இன்பமே சாத்விகமாகும். அந்த இன்பம் உள்ள அமைதியினால் உண்டாகும். [18-37]

# 19

## தியானம்

[கீதை அத்தியாயங்கள் 2, 5, 6, 12, 14.]

தான் செய்யவேண்டிய கருமங்களில் தன்னுடைய இந்திரியச் சுகங்களைக் கருதாமல் வேலையை நடத்தப் பழக்கிக்கொண்டபின் ஒருபடி மேல் செல்லலாம். கருமம் செய்வதே தன் கடமையும் அதிகாரமும் என்று அறிந்து, அதன் முடிவைப்பற்றிக் கவலைப்படாமல், முடிவு எந்த விதமாயினும் அதற்காக மகிழ்ச்சியோ துயரமோ அடையாமலிருக்க முயற்சி செய்யவேண்டும். எடுத்த கருமத்தில் ஜயம் பெறினும் அபஜயமாயினும் மனங் கலங்கக் கூடாது. சுகமும் துக்கமும் சமமாகப் பாவிக்க வேண்டும். அதாவது, மகிழ்ச்சி தரும் சம்பவங்கள் ஏற்பட்டாலும், துயரம் விளைக்கும் சம்பவங்கள் ஏற்பட்டாலும் மனம் அமைதியுடன் இருக்குமாறு வழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். ஒரு சுகம் வருமுன் அதை நினைத்து நினைத்து மனம் பொங்குவதும், வந்துபோனபின் அதை நினைத்து நினைத்துத் துக்கப்படுவதும் சுகதுக்கத்தின் இடைவிடாத் தொடர்ச்சியாகும். சுகமும் துக்கமும் ஒன்றின்றி மற்றொன்று இருக்கமுடியாது. இவையிரண்டும் ஒன்றன்பின் ஒன்றாகச் சேர்ந்தே வரும். துக்கமே இல்லாவிடின் சுகமே துக்கமாகும். இரண்டும் பொருள்களின் சேர்க்கையால் உண்டாகி,



க்ஷணமாத்திரம் இருந்து மறையும் மனோபாவங்களேயொழிய வேறல்ல. இவை ஆத்மாவைத் தீண்டா. அதாவது, அதை அழிக்கவோ மாற்றவோ அவைகளால் முடியாது. வெளியிலிருந்து வரும் எந்தச் சுகமும் துக்கமும் ஆத்மாவுக்கு ஒரு பாக்கியமும் உண்டாக்கா. தன் உள்ளத்தில் எண்ணும் எண்ணங்களே, தான் செய்யும் செயல்களே தன் ஆத்மாவின் முன்னேற்றத்திற்கும் பிற்போக்குக்கும் காரணம்; வேறு எதுவுமல்ல.

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥

குளிரும் வெப்பமும், இன்பமும் துன்பமும், அணுக்களின் தீண்டுதலினால் தோன்றி மறையும்; அநித்யம். அவற்றைப் பொறுத்துக்கொள். [2-14]

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥

எவன் இவற்றால் துயரம் அடையாமல் இன்பமும் துன்பமும் நிகரெனக் கொள்ளுகிறானோ அந்தத் தீரன் அமிருதத்வத்தை அடைந்தவனாகவே வைத்துக்கொள்ளலாம். [2-15]

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥

சுகம் துக்கம், இழத்தல் பெறுதல், வெற்றி தோல்வி, இவற்றை நிகரெனக் கொண்டு போருக்கு ஒருப்படு. இவ்வண்ணம் கருமம் புரிந்தால் பாவம் எய்தமாட்டாய். [2-38]

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥

புறத்தீண்டுதல்களின் லுண்டாகும் இன்பங்கள் துக்கத்திற்குப் பிறப்பிடங்களாய் முடியும். அவ்வின்பங்கள் தொடக்கமும் இறுதியு முடையன. அறிவுடையோன் அவற்றில் களியுறுவதில்லை. [5-22]

शक्नोतीहैव यः सोढुं प्राक् शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥

சரீரம் நீங்குமுன் இவ்வுலகத்திலேயே காமக் குரோதங்களால் விளையும் வேகத்தை எவன் பொறுக்க வல்லானோ அந்த மனிதன் யோகி; அவனே சுகத்தை யடைந்தவன். [5-23]

**ம**னதில் பிரசாந்தி யடைந்தால் அதுவே பரமானந்தம். பரமபதத்தில் அடையக் கூடிய சுகத்திற்கு ஒருவாறு சமமாய்ச் சொல்லக் கூடியதும் இவ்வுலகத்திலேயே அடையக்கூடியதும் இந்தச் சாந்தமே.

योऽन्तः सुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥



புறப்பொருள்களைப் பற்றாமல் தனக்குள்ளே இன்பமுடையவனாய், தனக்குள்ளே களியுறுவோனாய், தனக்குள்ளே ஒளிபெற்றவனாகிய யோகி பிரம்மநிலை யடைந்து பிரம்ம நிர்வாணம் எய்துகிறான். [5-24]

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥

காமமும் குரோதமும் தவிர்த்துச் சித்தத்தைக் கட்டுப்படுத்திய ஆத்ம ஞானிகளுக்குப் பிரம நிர்வாணம் அருகிலேயே உள்ளதாகும். [5-26]

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥

இந்திரியங்களையும், மனதையும், புத்தியையும் கட்டி, மோக்ஷத்தை வாழ்க்கையின் இலக்காகக் கொண்டு, ஆசை, பயம், குரோதம், இவைகளை ஒழித்த முனி முக்தனேயாவான். [5-28]

எந்தக் காரியம் செய்தபோதிலும் அதைச் சுயநல எண்ணமில்லாமற் செய்வதில் நன்றாய்ப் பழகி, அதுவே சுபாவமாகச் செய்துகொண்டுவிட்டால் பிறகு மனம் பக்குவப்படும். அதன்மேல் கருமங்கள் எப்படி முடிந்தாலும் சாந்தம் குலையாமல்நிற்கச் சக்தியுண்டாகும். ஆசைப்பற்றுகளை விட்டாலொழிய இது முடியாது. உண்மைச் சுகம் அந்தராத்

மாவில் உண்டாவதுதான். புலன்களின் வழியாக அடையும் சுகபோகங்கள் ஆத்ம சுகத்தைத் தரா என்பதை நன்கு உணரவேண்டும்.

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
योगारूढस्य तस्यैव शमः कारण मुच्यते ॥

யோகநிலையில் ஏற விரும்பும் முனிக்குக் கருமமே கருவியாகக் கூறப்படுகிறது. யோக நிலையில் ஏறியபின் அதனாலுண்டாகும் உள்ளச் சாந்தம் அவனுக்குக் கருவியாகிறது. [6-3]

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।
सर्वसङ्कल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥

ஒருவன் எல்லாச் சங்கற்பங்களையும் துறந்துவிட்டு இந்திரிய விஷயங்களிலேனும் செயல்களிலேனும் பற்றுதலின்றி இருப்பானாயின், அப்போது அவன் யோக நிலையில் ஏறியவன் என்று சொல்லப்படுகிறான். [6-4]

उद्धरेदात्मनाऽऽत्मानं नाऽऽत्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥

தன் ஆத்மாவினால் தன்னை உயர்த்திக் கொள்க. ஆத்மாவைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம். தனக்குத் தன் ஆத்மாவே நண்பன். ஆத்மாவே தனக்குப் பகைவனும் ஆகும். [6-5]



बन्धुरात्माऽऽत्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥

தன்னைத்தான் வென்றவனுக்கே தன் ஆத்மா நண்பன் ஆகும். தன்னைத்தான் வெல்லாதவனுக்குத் தன் ஆத்மாவே பகைவனாகிக் கெடுக்கும். [6-6]

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥

தன்னைத்தான் வென்று பிரசாந்தி அடைந்தவனுடைய உயரிய ஆத்மா சீதோஷ்ணங்களிலும், சுகதுக்கங்களிலும் மானவமானங்களிலும் சமநிலைப்பட்டு விளங்கும். [6-7]

சுகத்திலும் துக்கத்திலும் மனங்கலங்காமல் சமத்துவத்தை அடையத் தியானம் அவசியம். கர்மயோகம் பழகிய பின், அதாவது தனக்கேற்பட்ட கடமைகளைச் சுயநலம் கருதாமல் செய்து, கருமங்களின் முடிவைப் பற்றிக் கவலையும் மனக்கலக்கமு மில்லாமலிருக்கப் பழகிய பின், அவ்வப்போது தனிமையிடத்தில் தங்கி, சித்தமலங்களை நீக்கி, தியானத்தில் அமர்வதனால் மனதில் ஸ்திர நிலை யுண்டாகும். இத்தகைய தியானத்தை அப்பியசிப்பதுதான் கீழ்க்கண்ட சுலோகங்களில் 'யோகம்' என்று சொல்லப்படுவது.

योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥

அடிக்கடி மறைவிடத்தில் தனியனாய் இருந்துகொண்டு, உள்ளத்தை ஆட்கொண்டு, ஆசையையும் பொருள்சம்பாதிப்பதையும் துறந்து, யோகம் அப்பியசிக்கக் கடவன். [6-10]

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥

சுத்தமான இடத்தில், அதிக உயரமில்லாமலும், அதிகத் தாழ்வில்லாமலும், தனக்கு ஓர் உறுதியான ஆஸனம் அமைத்துக் கொண்டு துணி, மான் தோல், தர்ப்பை, இவற்றைப் போட்டு உட்காரவேண்டும். [6-11]

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥

மனதை ஒரு முகமாக்கி, உள்ளத்தையும் இந்திரியச் செயல்களையும் நன்கு கட்டுப்படுத்தி ஆஸனத்திலமர்ந்து, ஆத்மா தூய்மை யடையும்படி யோகத்திலே பொருந்தக் கடவன். [6-12]

समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥

உடம்பையும் தலையையும் கழுத்தையும் சமமாக அசைவின்றி வைத்துக் கொண்டு,



உறுதி சான்றவனாய், தன் மூக்கு நுனியில் திருஷ்டியை நிறுத்திக்கொண்டு, இங்குமங்கும் சுற்றி நோக்காம லிருக்கவேண்டும். [6-13]

प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥

பிரசாந்தம் எய்திய உள்ளத்துடன் அச்சம் என்பது இல்லாமல், பிரமசரிய விரதத்தில் நிலைகொண்டு, மனதை அடக்கி, என்னில் சித்தத்தை மூழ்குவித்து என்னை யடைய யோகத்தி லிருக்கக்கடவன். [6-14]

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥

மிகைபட உண்போனுக்கு யோகமில்லை; முற்றிலும் உபவாசமிருப்பதினாலும் பயன் இல்லை. மிகுதியாக உறங்குவோனுக்கும் யோகம் முடியாது; அப்படியே தூக்கம் விட்டதனாலும் பயனில்லை. [6-16]

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥

ஒழுங்குக் குட்பட்ட உணவும், விளையாட்டும், கருமங்களைச் செய்வதில் ஒழுங்குக் குட்பட்ட முறையும், ஒழுங்குக் குட்பட்ட உறக்கமும் விழிப்பும் கொண்டவனே துயரம் என்

பதை யொழிக்கும் யோகநிலையை அடைவான். [6-17]

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥

சித்தத்தைக் கட்டிப் பிடித்து ஆத்மயோகத்தில் கலந்துநிற்கும் யோகிக்கு, காற்றில்லாத இடத்தில் அசைவின்றி நிற்கும் விளக்கை முன்னோர்கள் உவமையாகக் காட்டினார்கள். [6-19]

எந்த விஷயத்திலும் வரம்புமீறிப் போகக்கூடாதென்பதைக் கீதை வற்புறுத்துகிறது. நோன்புகளிலும் அளவுக்கு மிஞ்சிப் போக வேண்டாம் என்று மேலே சொல்லி யிருப்பதைக் கவனிக்க. யோக சித்திக்கு முக்கியமான சாதனம் மனதைக் காப்பது. மனமானது எப்போதும் ஓடித் திரியவே பார்க்கும். மனதில் உற்பவமாகும் எண்ணங்களை அடக்கி யாளாமற்போனால், அவை மனதைக் கவர்ந்துகொண்டு ஓடிவிடும். எப்போதும் இழுத்துப்பிடித்தே யிருக்கவேண்டும். எவ்வளவு சிரமப்பட்டு அடக்கினாலும், மறந்து மறந்து மறுபடியும் நினைவுகள் ஓடித் திரியும். அதைக் கண்டு பயப்படாமல் அவ்வப்போது மனதை ஸ்திரப்படுத்திக் கொண்டு பரமாத்ம சிந்தனையில் நிற்கவேண்டும்.

सङ्कल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥



மனதில் கற்பித்துக் கொள்ளும் எண்ணங்களினின்று எழும் விருப்பங்களை யெல்லாம் மிச்சமறத் துறந்துவிட்டு, எல்லா விஷயங்களினின்றும் விலகுமாறு இந்திரியங்களை மனதால் கட்டுப்படுத்தி, [6-24]

शनैःशनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत् ॥

ஸ்திர புத்தியுடன் மனதை ஆத்மாவில் நிறுத்தி வரவர அதிலேயே மகிழ்ச்சி பெறப் பழகக் கடவன். எதிலும் கவலை யுறாதிருக்கக் கடவன். [6-25]

यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥

மனம் சஞ்சலமாய், ஸ்திரமின்றி, உழலும் போதெல்லாம், உடனுக்குடனே அதைக் கட்டுப்படுத்தி ஆத்மாவுக்கு வசமாக்கிக் கொள்வான். [6-26]

प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥

மனம் சாந்தமாய் ரஜோ குணம் ஆறி, மாசு நீங்கி, பிரம்மநிலை யடைந்த யோகிக்குக் கிடைக்கும் சுகம் மிகச் சிறந்தது. [6-27]

மன அமைதி யடைந்தவன் எவ்வாறிருப்பான் என்பதை அடியில் காணலாம்:

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥
सन्तुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मे भक्तः स मे प्रियः ॥

எவ்வுயிரையும் பகைத்தலின்றி நட்பும் கருணையும் உடையவனாய், யான் என்பதும் எனது என்பதும் நீங்கி, சுகத்தையும் துக்கத்தையும் ஒரு நிகராகக் கொண்டு, [12-13]

எப்போதும் மன மகிழ்ச்சி யுடையவனாய், உள்ளத்தை வசப்படுத்தியவனாய், திட நிச்சய முடையவனாய், என்னிடத்தே மனதையும் மதியையும் அர்ப்பணம் செய்த யோகி என் பக்தன், எனக்கு இனியவன். [12-14]

यस्मान्नोद्विजयते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥

எவனை உலகத்தார் வெறுப்பதில்லையோ, உலகத்தாரை எவன் வெறுப்பதில்லையோ, களிப்பாலும், அச்சத்தாலும், சினத்தாலும் விளையும் கொதிப்புகளினின்றும் எவன் விடுபட்டானோ, அவனே எனக்கினியவன். [12-15]



अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥

எதனையும் வேண்டி எதிர்பார்த்தலின்றி, தூயோனாய், திறமுடையோனாய், பற்றுகளற்றவனாய், கவலை நீங்கியவனாய், எல்லாக் காரிய திட்டங்களையும் துறந்து என்னிடம் பக்தி செலுத்துவோனே எனக்கினியவன். [12-16]

यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥

களித்தலும், பகைத்தலும், துயர்ப்படுதலும், அவாவுறுதலுமின்றி, நன்மை தீமை வேற்றுமையைத் துறந்த பக்திமானே எனக்கினியவன். [12-17]

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥
तुल्यनिन्दास्तुतिर्मौनी सन्तुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥

பகைவனிடத்தும், நண்பனிடத்தும், பிறர் மதித்தலிலும், அவமதித்தலிலும், குளிரிலும், வெப்பத்திலும், இன்பத்திலும், துன்பத்திலும் சமமாக இருந்து, பற்றுகளை நீக்கி, [12-18]

புகழையும் இகழையும் நிகராகக்கொண்டு, பேச்சில்லாமல், யாது வரினும் அதில் மகிழ்ச்சி

யுற்று, தன் இருப்பிடம் இஃது என்பதில்லாமல், ஸ்திர புத்தியுடனிருக்கும் பக்தன் எனக்கினியவன். [12-19]

இவ்வாறு இந்திரிய நிக்கிரகத்தினாலும், நியமங்களாலும் தியானத்தாலும் அடைந்த சாந்தியையுங் கூட, பூர்வ கருமபலனைப் பிறக்கும்போது தேகத்தோடு கூடவந்திருக்கும் பிரகிருதி குணங்கள் கலைத்துக்கொண்டே யிருக்கும். ஞானமடைந்த பின்னும் இந்தக் குழப்பம் உண்டாகும். அதைக் கண்டு தயங்க வேண்டியதில்லை. அது சுபாவம் என்று உணர்ந்து, அடிக்கடி மெய்ப்பொருளை நினைவூட்டிக்கொண்டு சாந்தியை இழக்காமல் காத்துக்கொள்ள வேண்டும். பிரகிருதி குணங்களைத் தாண்டிச் செல்ல வேண்டும். குணங்களைத் தாண்டினவன் யாரெனில்,

प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि सम्प्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥

மனப்பிரகாசம், தொழில் செய்யத் தூண்டும் குணம், உணர்வு நீங்கியநிலை, இவை முறையே தோன்றும் போது இவற்றை வெறுக்காமலும் இந்நிலைகள் நீங்கியபோது இவற்றை விரும்பாமலு மிருப்போன்; [14-22]

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥



சுய சுபாவ குணங்களால் மனங்கலங்காமல் உதாஸீனமாக அமர்ந்து "குணங்கள் சுழல்கின்றன" என்றெண்ணி அசைவற்று நிற்பவன்; [14-23]

समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥

துக்கத்தையும் சுகத்தையும் சமமாகக் கொண்டு ஆத்ம நிலையில் நிற்பவன், மண்ணாங்கட்டியையுங் கல்லையும் பொன்னையும் நிகராகக் காண்பவன், அன்பு செய்பவரிடத்தும் அப்பிரியம் செய்பவரிடத்தும் சமமாக நடப்பவன், இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் நிகராகக் கொள்ளும் தீரன்; [14-24]

मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥

கௌரவத்தையும் அவமதிப்பையும் நிகராகக் கருதுபவன், நண்பரிடத்தும் பகைவரிடத்தும் நடு நிலைமை பூண்டவன், தனக்கென்ற தொழிலாரம்பங்கள் அனைத்தையும் துறந்தவன், இத்தகையோனே குணங்களைக் கடந்தவன் என்று சொல்லப்படுவோன். [14-25]

# 20

## இயற்கைக் குணங்கள்

[கீதை அத்தியாயங்கள் 5, 13, 14, 18.]

மனிதன் ஏன் தவறான வழியில் செல்கிறான் என்பதன் உண்மைக் காரணத்தை அடிக்கடி நினைவுக்குத் தந்து கொள்ளவேண்டும். தீச்செயல்கள் செய்தவர்களைக் கண்டு சாந்தம் இழக்காமல், அவர்கள்பால் அன்பு பாராட்டவும், மனம் கலங்கும் போதெல்லாம் அமைதியடையவும் இது மிகவும் பயன்படும்.

தன்னைத் தான் அடக்கி யாளாமல் மனதை அஜாக்கிரதையாக விட்டபோதெல்லாம், பிறப்புடன் வந்திருக்கும் இயற்கைச் சுபாவத்தின் வேகம் வேலை செய்யும். இயற்கைச் சுபாவம் என்பது அனைவரையும் வேதனைப்படுத்துகிறது. அது செய்கை உருவமாக வெளிப்படுகிறது. இதை ஒருவனிடம் கண்டு நாம் கோபிக்கலாமா? மற்றவர்களுடைய செயலைக் கண்டு வெறுப்படையும்போதெல்லாம், அவனவன் தன் குறைகளை நினைவுக்குத் தந்துகொள்ளவேண்டும். உன் மனம் சுத்தமாக இருக்கிறதா? உன் இயற்கைச் சுபாவம் உனக்குத் தெரியுமே. மற்றவர்களுக்கு வெளிப்படையாகாவிடினும் அது உள்ளே செய்யும் வேலையை நீ கண்டிருக்கிறாயே. அதை அடக்கினது உன் பாக்கியம். மற்றவர்கள் அந்தப் பாக்கியத்தை அடையாமற் போன



தற்கு வருந்துவாயாக. பகவானுடைய பிரஸாதத்தை அடைந்தாலல்லவோ ஆத்மா இந்தச் சுபாவ கர்ம மூட்டையினின்று தப்பமுடியும்? உலகத்தில் நடப்பதெல்லாம் ஈசுவரன் சங்கற்பம். எது தீமை எது நன்மை என்று நீ தீர்மானிக்கலாமா? முடிவில் தீயது எது, நல்லது எது என்பது ஆண்டவனுக்கே தான் தெரியும்; ஜகத்தின் அமைப்பை அறியாத நாம் அதைத் தீர்மானிக்க முடியாது.

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथाऽऽत्मानमकर्तारं स पश्यति ॥

எவ்வகையிலும் தொழில்கள் பிரகிருதியாலேயே செய்யப்படுகின்றன. ஆதலால் ஆத்மாவானது கர்த்தா அல்ல என்று கண்டுகொண்டோனே உண்மையைக் கண்டவன். [13-30]

सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसम्भवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥

ஸத்வம், ரஜஸ், தமஸ், இந்தக் குணங்கள் பிரகிருதியில் எழுவன. சுபாவத்தில் ஆத்மா அவ்வியய மாயினும் உடம்பில் நிற்கும்போது அது இக்குணங்களால் கட்டுப்படுகிறது. [14-5]

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टाऽनुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥

குணங்களைத் தவிர வேறு கர்த்தா இல்லையென்பதை ஜீவன் கண்டுகொண்டு குண

இந்தச் சுலோகங்களைக்கொண்டு தன்பொறுப்பு தனக்கில்லையென்று பொருள் செய்துகொள்ளக் கூடாது. எல்லாம் பிறப்புச் சுபாவம் என்று விட்டு விட்டு, பொறுப்பற்று நடக்க இச் சுலோகங்களைப் பிரமாணமாக வைத்துக் கொள்ளுவது மூடத்தனமாகும். ஆத்மசக்தியினால், சுபாவ குணங்களை, அதாவது தான் முன்ஜன்மத்தில் செய்த கருமங்களின் பலனாகத் தான் சம்பாதித்த சுபாவ குணங்களை அடக்கியாள முடியும்; அடக்கியாண்டு அவற்றை வென்று விடுதலை யடையக்கூடும். சுபாவ குணங்களைப்பற்றிக் கீதையில் சொல்லுவதெல்லாம் மற்றவர்களை அன்புடன் பாராட்டவும், தனக்குள் மனங் கலங்காமலிருக்கவும் சாதனமாக உண்மையை எடுத்துக் காட்டவே யொழிய, அவனவன் தன்னைப் பற்றி ஆத்மப்பொறுப்பை இழந்துவிட்டுப் பிரயத்தனமின்றிக் கெட்டுப்போகவல்ல.

இந்த உபதேசம், மற்றவர்களை, இவர்கள் பூர்வ கர்மத்தின் பயனாக இழிகுலம் அல்லது இழிகுணம் கொண்டவர்கள் என்று இகழ்ந்து குரூரமாகவும், அசூயையுடனும், கர்வங்கொண்டும் நடத்த ஆதாரமாகாது. அப்படி ஒருவன் செய்தால் தன்னுடைய ஆத்மாவைத் தாழ்த்திக்கொண்டவனாவான்.

ஆத்மா எதனாலும் மாறுதலடையாது. அது தனித்து நிற்கிறது. பிரகிருதி குணங்களே எல்லாச் சேஷ்டைகளையும் செய்கின்றன. அந்தச் சேஷ்டைகளால் ஆத்மா மாறுதலடையாது என்றால், அதன்



சொரூபத்தை உணர்த்துவதற்காகச் சொன்னதாகும். பாலில் மோர்விட்டால் பால் தயிராகிப் போவதைப்போல், தேகத்துடன் சேர்ந்த ஆத்மாவின் சொரூபம் பாபபுண்ணியத்தால் மாறிவிடாது. ‘தனித்து நிற்கிறது’, ‘மாறுதலடையாது’ என்பவற்றின் கருத்து இதுவே யொழிய, ஆத்மாவுக்குப் பொறுப்பில்லையென்று சொன்னபடியல்ல. செய்யும் செயல்களின் பாபபுண்ணிய பலன் அதைத் தீண்டாது என்பதல்ல.

சுபாவ குணங்கள் ஜடப் பிரகிருதியான தேகத்தில் நாட்டப்பட்டன வாயினும், அவை இந்திரியங்களையும் மனதையும் தம் ஆதீனமாக்கிக் கொண்டு, அவைகளின் வழியாய் ஆத்மாவையும் சிறைப்படுத்திவிடும். ஆனால் குணங்களுடன் போர்செய்து வென்று, சிறை செய்யப்படாமல் தப்புவதற்கு ஆத்மாவுக்குச் சக்தியும் சுதந்திரமும் உண்டு. இதற்கு ஞானம் என்ற ஒப்பற்ற துணை வேண்டும்.

ஞானம் என்பது, கேவலம் படிப்பினாலும், ஆராய்ச்சியினாலும், தியானத்தினாலும் மட்டுமே வராது. உண்மையறிவுதான் ஞானம். பயன்படுமாறு உண்மையான அறிவு அடைய விரும்பினால், புலன்களையும்,மனதையும், செயலையும் அடக்கியாள வேண்டும். இப்படி அடக்காவிடின், அடைந்த அறிவு, உள்ளத்தில் புகுந்து ஆத்மாவிற்குத் துணை

யாகாது. எண்ணெய்மேல் ஜலம்விட்ட மாதிரி பயனற்றுப்போகும். உண்மையறிவு அடையாமல், செயலையும் மனதையும் அடக்கியாளாமல், சுபாவ குணங்களை எதேச்சையாய் வேலைசெய்ய விட்டு விட்டோமானல், கர்மச்சுமை விருத்தியாய்க் கொண்டே போகும்.

## 21

## அனைவருக்கும் விடுதலை

[கீதை அத்தியாயங்கள் 4, 7, 9.]

மகா பாவம் செய்தவனாயினும், எனக்கு ஏது கதி என்று யாரும் ஏங்கி நிராசை அடையவேண்டியதில்லை. அவனுக்குங்கூட, தான் செய்த பாவச் செயலைப்பற்றித் துக்கப்பட்டுப் பகவானைச் சரணமடைந்தால் விடுதலையுண்டு. இது கீதையின் இறுதி மொழி.

இதென்ன? கர்மபந்தம் இவ்வளவு சுலபமாகத் தீர்த்துக்கொள்ள முடியுமா? என்று சந்தேகப்பட வேண்டியதில்லை. செய்த பாவச் செயலைப்பற்றியும், நினைத்த பாவ எண்ணத்தைப்பற்றியும் உண்மையாகத் துயரப்பட்டு மனங்கரைந்துருகினல், அதுவும் ஒரு கர்மமே யாகும். அதன் நற்பயனையும் ஆத்மா அடையும். ஆகையால் பகவானைச் சரணமடைந்தால் கர்மமூட்டை தீர்ந்துவிடும் என்பது கர்ம விதிக்கு மாறாகாது.

ஆனல், பிறகு மந்திரங்கள் சொல்லிப் பிராயச்சித்தம் செய்துகொள்ளலாம் என்று எண்ணி மனமறியப் பாவச் செயல் செய்தால் தப்ப முடியாது. உண்மையாக மனமுருகினலொழியப் பாவம் தீராது. வேணுமென்று செய்தவனுக்கு அப்படி உண்மையான பச்சாத்தாபம் வரமாட்டாது. தான் செய்த பாவத்திற்குத் தகுந்த அளவில் ஒருவன் பச்சாத்தாபப்பட்டால், அந்தப் பச்சாத்தாபமே அவனுக்

குப் பெரும் துயரமும் துக்கமும் தந்து, மற்றவர்கள் விதிக்கும் தண்டனையைவிடப் பெருந் தண்டனை ஆகும். அவ்விதமான துயரத்தை அனுபவிப்பது தன்னைத் தானே சுத்தம் செய்துகொண்டதாகும். ஆனால் எவ்வளவு தூரம் உண்மையாகத் துயரப்படுகிறோமோ, அதாவது நாமே துக்கத்தில் ஆழ்ந்து தண்டனை செய்துகொள்கிறோமோ, அந்த அளவுக்குத்தான் முன் செய்த பாவத்திலிருந்து தப்புகிறோம்.

பச்சாத்தாபப்படுவதும், பகவானைச் சரண் அடைவதும் உள்ளத்தில் உண்டாகும் ஆத்மாவின் வேகமே யொழிய, வெறும் மந்திரமாவது, பேச்சாவது, ஜபங்களாவது, சடங்காவது அல்ல. புரோகிதனே, குருவோ சொல்லும் க்ஷமா மந்திரத்திலேயே பிராயச்சித்தம் முடிவடைவதில்லை. மந்திரமும், சடங்கும், புரோகிதனும், குருவும் உபயோகமில்லாதில்லை. புனிதமாவதற்கு ரிஷிகளும் முன்னோர்களும் உபயோகப்படுத்தின பதங்களையும், காரியங்களையும், சமிக்ஞைகளையும் நாமும் உபயோகப்படுத்துவதனால் நல்ல எண்ணங்களும், தைரியமும், பக்தியும் உண்டாகும். மற்றவர்கள் அறியச் செய்யும் சடங்குகளால், செய்த பாவத்தைப்பற்றி வெட்கமும் உண்டாகும். இவையெல்லாம் மனதைப் புனிதப்படுத்தக் கூடிய கருவிகள்; அவ்வளவே யொழிய, அவைகளைக்கொண்டு சத்தியத்தை ஏமாற்ற முடியாது. ஒருகால் மற்றவர்களை ஏமாற்றலாம்;



தன்னைத்தானேயும் மோசம் செய்துகொள்ளலாம்; ஆனால் உண்மையையே ஒருவன் எவ்வகையினாலும் ஏமாற்றமுடியாது. கர்மவிதி என்பது, உண்மையின் உருவமே. ஆகையால் அதை ஏமாற்றமுடியாது. ஒரு வியாபாரி பொய்த்தராசு அல்லது அளவில்குறைந்தபடி வைத்துக்கொண்டு ஜனங்களை ஏமாற்றலாம். ஆனால், எந்த வியாபாரியாலும் தன் கணக்கையே ஏமாற்ற முடியாது. வைத்தியன் நோயாளியிடம் பொய் சொல்லலாம்; ஆனால் ஜுரமானியையே ஏமாற்ற முடியாதல்லவா?

வேறு சாஸ்திர புஸ்தகங்களில் எவ்வாறு சொல்லியிருந்த போதிலும் பகவானைச் சரணமடைந்து விடுதலை பெறுவதற்கு ஜாதியாவது, குலமாவது பாதியா. இதில் ஆண் பெண் வித்தியாசமுமில்லை. இதற்குக் கீதையில் சொல்லப்பட்டிருக்கிற சுலோகங்கள் வருமாறு:

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥

நான் எல்லா உயிர்களிடத்தும் சமமானவன்; நான் யாரையும் வெறுப்பதுமில்லை, விரும்புவதுமில்லை. என்னைப் பக்தியுடன் யார் வழிபடுகிறார்களோ அவர்கள் என்னகத்தில் அமர்ந்திருப்பார்கள்; அவர்கள் அகத்து நான் இருப்பேன்.
[9-29]

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥

மிகவும் தவறான நடையோனாயினும்வேறு வழியில் மனஞ்செல்லாமல் என்னை வழிபட்டால் அவனை நல்லோனென்றே கருதுக. அவன் முயற்சி நன் முயற்சி. [9-30]

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्ति निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥

அன்னவன் விரைவிலே தர்மாத்மாவாவான்; நித்ய சாந்தமு மெய்துவான். நிச்சயமாய் அறிவாயாக: என் பக்தன் எவனுக்கும் நாசம் இல்லை. [9-31]

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युःपापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥

பாவிகள் என்னைச் சரண்புகுவாராயின், மாதராயினும் வைசியராயினும் சூத்திரராயினும், அவர்களும் பரகதி யடைவார்கள். [9-32]

கடவுளை ஆராதிப்பவன் எக்குலம், ஆணா பெண்ணா, என்ற வித்தியாசங்கள் எப்படி ஒரு பொருட்டல்லவோ, அதுபோலவே, எந்த முறையில் ஆராதனை செய்யப்படுகிறது என்பதும் தடையாகாது. இது கீதையில் காணும் மகத்தான விஷயம்; ஹிந்து மதத்திற்குப் பெரிய கீர்த்திதரும் விஷயம்.



கடவுளைப் பலபேர் பல விதமாக ஆராதிப்பார்கள்; மத சம்பிரதாய பேதங்களை நான் பொருள்படுத்துவதில்லை என்று கீதையில் பகவான் வியக்தமாகச் சொல்லுகிறார்.

ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥

யாவர் என்னை எங்ஙனம் வழிபடுகிறார்களோ, அவர்களுக்கு நான் அங்ஙனமே அருள்வேன். மனிதர் எந்த மார்க்கத்தை அனுசரித்தாலும் அது என்னை யடையும் வழியே ஆகும். [4-11]

येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥

அந்நிய தேவதைகளைச் சிரத்தையுடன் தொழும் பக்தரும் முறை தவறியாயினும் என்னையேதான் தொழுகின்றனர். [9-23]

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥

இலை, பூ, கனி, நீர், எதையேனும் பக்தியுடன் எனக்கு ஒருவன் அளிப்பானாயின், தன்னைத் தான் அடக்கியாண்டு அவ்வாறு பக்தியுடன் அளித்ததை ஆவலுடன் ஒப்புக்கொள்வேன். [9-26]

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥

நீ எது செய்யினும், எதனை உண்பினும், எதை ஹோமம் பண்ணினும், என்ன தானம் கொடுத்தாலும், எத்தவம் செய்தாலும், எனக்கு அர்ப்பணம் என்றே செய். [9-27]

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥

பல விருப்பங்களால் கவரப்பட்ட மதியுடையோராய், தத்தம் பிரகிருதியாற் கட்டுண்டு, வெவ்வேறு நியமங்களைத் தழுவி, சிலர் அந்நிய தேவதைகளை வழிபடுகின்றனர். ஆனால், [7-20]

यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥

எந்த பக்தன் சிரத்தையுடன் எந்த வடிவத்தை அர்ச்சிக்க விரும்பினாலும், அவனுடைய தளரா நம்பிக்கையை நான்தான் தருகிறேன். [7-21]

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥

அவன் அந்த நம்பிக்கையை அடைந்து அவ்வடிவத்தை ஆராதிக்க வேண்டுகிறான்.



விரும்பினவற்றை அதனின்றும் அவன் எய்துகிறான். எனினும் அவற்றை வகுத்துக் கொடுப்போன் நானேதான். [7-22]

இவ்வாறு மதம், சம்பிரதாயம், முறை இவை எவ்விதமிருந்தாலும் எல்லா வழிபாடும் பகவானைச் சேரும் என்று கீதையில் சொல்லியிருப்பது, அக்காலத்தில் ஜனங்கள் அனுஸரித்து வந்த மதங்கள், முறைகள், சம்பிரதாயங்களைப் பற்றித்தான் சொன்னது; பிந்தி உண்டான புற மதங்களையும் முறைகளையும் பற்றி அப்போது சொல்லியிருக்கமுடியாது என்று சொல்லலாம். ஆயினும், சொல்லியிருக்கும் வாக்கியங்களில் பிந்திவந்த புறமதங்களும் உட்படப் பூரணப் பிரயோகம் செய்யக்கூடிய பொருள் அடங்கி யிருக்கிறது. சர்வமதங்களையும் அங்கீகாரம் செய்யும் மாணிக்கம் போன்ற இந்த வாக்கியங்களை நாம் கௌரவித்து நடந்துகொள்ளவேண்டும்.

# 22

## நாஸ்திகம் கூடாது

[கீதை அத்தியாயம் 16.]

கடவுளை வழிபடுவதற்குச் சாதனமான சர்வ மதங்களையும் முறைகளையும் பகவான் அங்கீகரிக்கிறார் என்று கீதை சொன்னபோதிலும், நாஸ்திகம் அல்லது அநாத்மவாதத்தை அது கண்டிக்கிறது. நாஸ்திக வாதத்தைப்பற்றிச் சொல்லும், அடியில் கண்ட சுலோகங்கள், 'தர்மமாவது என்ன, சத்தியமாவதென்ன, ஒன்றும் இல்லை; மனிதர்கள் சேர்ந்து தங்கள் சுகத்திற்காக வைத்துக்கொண்டிருக்கும் ஏற்பாடே தருமம்' என்று தற்காலத்தில் சிலர் பேசும் பேச்சுக்களையே குறிப்பதுபோல இருக்கின்றன.

प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः ।
न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥

அஸுரத்தன்மை கொண்டோர் தொழில் செய்யும் முறையும் அறியார்; தொழிலை நீப்பதும் அறியார்; தூய்மையேனும், ஒழுக்கமேனும் வாய்மையேனும், அவர்களிடம் இல்லை. [16-7]

असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्परसम्भूतं किमन्यत्कामहैतुकम् ॥

அவர்கள், 'இவ்வுலகத்தில் சத்தியம் என்பதொன்றில்லை, உலகம் தருமத்தில் நிலைபெற்றி



ருப்பதுமில்லை. ஆளும் ஈசுவரனுமில்லை' என்பார்கள். ஒன்றோடொன்று கலந்து அந்தப் புணர்ச்சியால் எல்லாம் பிறந்தனவென்றும், உலகத்திற்குக் காமமே ஹேதுவென்றும் சொல்லுவார்கள். [16-8]

அநாத்மவாதிகளுடைய மதத்தின்படி மனிதன் அடையும் அசுர முன்னேற்றத்தையும் நாகரிகத்தையும் விவரிக்கிறார் :

एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः ॥

அற்ப புத்தியுடைய அந்த உள்ளங்கெட்டவர்கள் இவ்வித நோக்கத்தில் நிலைபெற்று, கொடிய தொழில்கள் செய்து உலகத்திற்குத் தீங்கிழைத்து அதன் நாசத்திற்குக் காரணமாவார்கள். [16-9]

काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः ।
मोहाद्गृहीत्वाऽसद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥

ஆற்றவொண்ணாத காமத்தை ஆச்ரயித்து, டம்பமும், கர்வமும், மதமும் பொருந்தியவர்களாய், மோகத்தால் பொய்க் கொள்கைகளைக் கொண்டு அசுத்த விரதங்களுடையோர்களாய்த் தொழில் புரிகிறார்கள். [16-10]

चिन्तामपरिमेयां च प्रलयान्तामुपाश्रिताः ।
कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥

மரணம் வரை தீராத, எண்ணற்ற கவலைகளில்பொருந்தி, காமவிருப்பங்களைத் தீர்த்துக் கொள்வதிலேயே ஈடுபட்டோராய், உண்மையே இவ்வளவுதான் என்று நிச்சயம் செய்து கொண்டு, [16-11]

आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।
ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसंचयान् ॥

நூற்றுக் கணக்கான ஆசைக் கயிறுகளால் கட்டுண்டு, காமத்திற்கும் குரோதத்திற்கும் ஆட்பட்டோராய், காமபோகத்துக்காக அநியாயஞ் செய்து, பொருட் குவியல்கள் சேர்க்க விரும்புகிறார்கள். [16-12]

**த**ற்காலத்தில் உலகம் இருந்துவரும் ஸ்திதி இதுவே யன்றோ? தனிப்பட்ட மனிதர்களின் ஆசைகளும் செயல்களும், ஜாதிக் கூட்டங்களின் நோக்கங்களும் செயல்களும் இவ்வாறே இருந்து வருகின்றன. கடவுளை மறந்த நாகரிகம் எவ்வாறு செல்லும் என்பதை இன்னும் பார்க்க:—

इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम् ॥
असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥



"இன்று இன்ன லாபம் அடைந்தேன்; இன்ன மனோரதத்தை இனிமேல் எய்துவேன்; இன்ன பொருள் அடைந்தேன்; இன்ன பொருளை இனி அடைவேன்; [16-13]

"இன்ன பகைவரைக் கொன்றுவிட்டேன்; இனி மற்றவர்களையும் கொல்வேன்; நான் அரசு புரிவேன்; நான் போகி, நான் ஸித்தன்; நான் பலவான், நான் சுகப்படுவேன்" என்றிவ்வாறெல்லாம் எண்ணுவார்கள். [16-14]

अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥

பலவித சித்தப்பிராந்தி யடைந்து, மோக வலையில் அகப்பட்டு, காமபோகங்களில் பற்றுண்டு, அசுத்தமான நரகத்தில் விழுகிறார்கள். [16-16]

आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्ये इत्यज्ञानविमोहिताः ॥

'நான் செல்வன்; எனக்குச் சொந்தக்காரக் கூட்டம் அதிகம் உண்டு; எனக்கு நிகர் யாருளர்? வேள்விகள் செய்கிறேன்; தானங்கள் கொடுக்கிறேன்; சுகங்களடைவேன்,' என்றிவ்வாறு அஞ்ஞானத்தில் மயங்கினவர்க ளாவார்கள். [16-15]

आत्मसम्भाविताः स्तब्धा धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥

இவர்கள் தற்புகழ்ச்சியில் உழல்வோர்; பிடிவாதக்காரர்; செல்வச் செருக்கும் மதமும் கொண்டோர்; டம்பத்துக்காக, விதி தவறி, பெயர் மாத்திரமான வேள்விகள் செய்கின்றனர். [16-17]

अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।
मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥

அகங்காரத்தையும், பலத்தையும், செருக்கையும், காமத்தையும், சினத்தையும் பற்றியவர்களாய் இவர்கள் தம் உடம்புகளிலும் பிற உடம்புகளிலும் பரமாத்மாவாக உள்ள என்னைப் பகைக்கிறார்கள். [16-18]

மோசமும், மிருகபலமும் கொண்டு சம்பாதித்த பொருளும், அதையொட்டிய நாகரிகமும், வெளிவேஷத்திற்கும் மனதைத் திருப்தி செய்து கொள்ளுவதற்கும் செய்யும் தானங்களும் 'பொது நன்மை'க்காரியங்களும், இவ்வேஷங்களுக்கு அஸ்திவாரமாகி நிற்கும் அதர்மத்தைத் தர்மமாக்கிவிட முடியா. இத்தகைய அநாத்மவாதமும் நாஸ்திகமும் முடிவில் நாசத்திற்கே வழியாகும்.

முன்னோர் கண்ட உண்மைகளை இழந்துவிடக் கூடாது. அவர்கள் தங்கள் ஆழ்ந்த சிந்தனையினா



லும், முயற்சியாலும், தவத்தாலும், தியானத்தாலும் கண்ட சத்தியத்தை மறுபடி நாம் முதலிலிருந்து யத்தனித்து நாமாகக் காண முயலுவது உசிதமல்ல. சம்பாதித்த பொருளை வைத்துக்கொண்டு மேலே சம்பாதிக்கவேண்டியதுதான் கடமை. முன்னோர் கண்ட உண்மைகளுக்குத்தான் சாஸ்திரம் என்று பெயர். ஒவ்வொருவனும் மறுபடியும் முதலிலிருந்து ஆரம்பிப்பது என்றால் முடியாத காரியமாகும்.

यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥

சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து காமம் தூண்டினபடி நடப்பவனுக்குச் சித்தியுமில்லை, சுகமுமில்லை, பரகதியுமில்லை. ]16-23]

तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥

ஆகையால் நீ எதைச் செய்யலாம், எதை நீக்கலாம் என்று வியவஸ்தை செய்துகொள்வதற்குச் சாஸ்திரமே பிரமாணமாக வைத்துக் கொள். சாஸ்திரவிதானத்தை யறிந்து நீ கருமங்களைச் செய்து வாழ்க்கையை நடத்துவாயாக. [16-24]

# 23

## குணவிபாகம்

[கீதை அத்தியாயம் 17.]

நம்முடைய பிரகிருதி குணங்களுக்குத் தகுந்தவாறு உபாஸனைக்கு மூர்த்தி தேடிக்கொள்ளுகிறோம். நாம் எதை உபாஸிக்கிறோமோ அந்தக் குணம் நமக்கு உண்டாகும். இப்படி உபாஸனை செய்பவன் குணமும் உபாஸனைக்கிரமமும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்படுகின்றன.

எந்தவிதமான சிரத்தை அல்லது நம்பிக்கையுடன் கருமங்களைச் செய்கிறோமோ அதுவும் இவ்விதமே. படைத்த குணத்துக்குத் தகுந்த சிரத்தை மனதில் உண்டாகும்; கொண்ட சிரத்தைக்குத் தக்க குணம் வந்து சேரும்.

ஆசாரமும், உணவும் இப்படியே. இவைகளெல்லாம் நாம் படைத்த குணத்திற்குத் தகுந்தவாறு ஏற்படும். குணமும் அவைகளைத் தொடர்ந்து மாறும். அடுப்பில் நெருப்புக்கும் விறகுக்கும் உள்ள சம்பந்தம் மாதிரி ; முதலில் நெருப்பு விறகை எரிக்கிறது. விறகு எரிவதால் நெருப்பு வளர்கிறது. பரஸ்பர உதவி ஏற்படுகிறது. நல்ல குணம் படைத்தவன், நல்ல குரு, நல்ல தெய்வம், நல்ல மனோபாவனைகள், நல்ல இலட்சியங்கள் வைத்துக்கொள்ளுவான். அதனால் இன்னும் குணம் மேன்மையடையும். நல்ல உணவில் அவனுக்கு ருசியுண்டாகும். நல்ல ஆகாரமும்



அவனுக்குச் சந்தோஷத்தைத் தரும். அவைகளால் அவனுடைய நல்லகுணம் இன்னும் வளரும். குணமில்லாதவனுடைய புத்தியோ, உபயோகமற்ற உபாஸனை, உபயோகமற்ற தாமஸ உணவு, துராசாரம் இவைகளில் செல்லும்; வர வரத் தாமஸ குணம் அதிகரிக்கும்.

இந்தச் சுழலிலிருந்து தப்பும்வழி என்னவென்றால், கர்மத்தைப்பற்றி முன் சொன்னதை நினைவுக்குத் தந்துகொள்ளவேண்டும். ஆத்மாவுக்குச் சுதந்திர புத்தி இருக்கிறது. செயலுக்கு அதிகாரமும் உண்டு. அதை உபயோகித்து, கர்மபந்தத்திலிருந்து தப்பும்படியுள்ளனவும் சுபாவ குணங்களை வெல்லும்படியமைந்தனவுமான உபாஸனை, ஆசாரம், ஆகாரம் இவைகளை நித்திய நியமமாக வைத்துக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால் மேன்மை யடைவோம். பூர்வ கர்ம பலனுக்கும், இந்த ஜன்மத்தில் செய்யும் கருமத்திற்கும் பீஜாங்குர சம்பந்தம். செடியிலிருந்து விதை உண்டாகிறது ; விதையிலிருந்து செடி முளைக்கிறது. காரணம் காரியமாகும்; காரியம் காரணமாகும். இதுவே தினசரி ஆசாரத்திற்கும் குணத்திற்கும் பரஸ்பர சம்பந்தம் ; ஒன்றிற்கு மற்றொன்று காரணமாகும்.

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥

உடலெடுத்த ஆத்மாக்களிடம் பிறவிக் குணமான சிரத்தை மூன்று வகையாகத்

தோன்றும், சாத்விகம், ராஜஸம், தாமஸம் என. [17-2]

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥

யாவருக்கும் தத்தம் பிறப்பியல்புக்குத் தக்கவாறு சிரத்தை உண்டாகிறது. ஆனல் ஜீவன் தான் கொண்ட சிரத்தையால் தன்னை ஆக்கிக் கொள்கிருன். எவன் எந்தப் பொருளில் சிரத்தை யுடையவனே, அந்தப் பொருளே தானுகிருன். [17-3]

டம்பத்திற்குச் செய்யப்படும் தவமும், ஆசாரமும் பயன் தரா. லாபத்தைக் கருதிச் செய்யப்படுவதும் அத்தகையனவே.

अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जनाः ।
दम्भाहङ्कारसंयुक्ताः कामरागबलान्विताः ॥

சிலர் டம்பமும் அகங்காரமும் கொண்டு, காமத்தாலும் சித்த விகாரத்தாலும் தூண்டப்பட்டு, சாஸ்திரத்தில் நியமிக்கப்படாத கோரமான தவம் செய்கிருர்கள். [17-5]

कर्षयन्तः शरीरस्थं भूतग्राममचेतसः ।
मां चैवान्तः शरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥

இங்ஙனம் மதிகெட்டவர்கள் தம் உடம்பிலுள்ள பூதத் தொகுதிகளையும் அகத்திலுள்ள



என்னையும் வருத்துகிருர்கள். இவர்கள் அஸுர எண்ணத்தோர் என்றறிவாய். [17-6]

தவம் என்பது மனேவாக்குக் காயம் மூன்றிலும் செய்யப்படுவது. நேர்மை, சுசி, பெரியோரிடம் வணக்கம், பிரம்மசரிய விரதம், பூததயை, இவை தேகத்தால் செய்யப்படும் தவம். வாக்குத் தவம் என்பது சத்தியமும், அன்பும், ஹிதமும் கொண்ட பேச்சு, நல்ல தர்மநூல்களைப் படித்தல் முதலியன. மனதை அமைதி நிலையில் வைப்பதும், சுத்த எண்ணங்கள் எண்ணுவதும், போக எண்ணங்களை நீப்பதும் மன நோன்பு ஆகும். இப்படிப் பலவித நோன்புகளையும், லாபம் கருதாமல், பிறருடைய மதிப்பைப் பெறுவோம் என்றெண்ணுமல், நோன்பின் சிறப்பைக் கருதியே செய்யவேண்டும். பிறருக்குத் துன்பம் உண்டாக்கவோ அல்லது பிடிவாதப் புத்தியினுலேயோ நோன்பு மேற்கொள்வது சுத்தத் தவறு.

देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥

தேவர் அந்தணர் குருக்கள் அறிஞர் இவர்களைப் பூசித்தல், தூய்மை, நேர்மை, பிரம்மசரியம், உயிர்களை ஹிம்சை செய்யாமை, இவை சரீரத்தைப்பற்றிய தவம். [17-14]

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥

பிறருக்கு மனக்கலக்கம் உண்டாக்காததும், சத்தியமும் பிரியமும் பொருந்தியதும், நலங்கருதியதுமான பேச்சுப்பேசுதல், சாஸ்திரம் ஓதிப் பயிலல், இவை வாக்கால் செய்யப்படும் தவம். [17-15]

मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥

மன அமைதி, உள்ள மகிழ்ச்சி, பேச்சடங்கல், உள்ளத்தைக் கட்டி யடக்கல், எண்ணத் தூய்மை இவை மனதால் செய்யப்படும் தவம். [17-16]

**தா**னமும் இப்படியே; என்ன நோக்கத்துடன் செய்யப்படுகிறதோ அவ்வாறு அது வகுக்கப்படும். கொடுக்கவேண்டும் என்கிற கடமையை உத்தேசித்து, மகிழ்ச்சியுடன், பதில் எதிர்பாராமல் கொடுப்பதே சரியான தானம். புண்ணியம் சம்பாதிக்கவென்று கொடுப்பதுங்கூட இரண்டாம் பக்ஷமே.

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥

கொடுத்தல் கடமை யென்றறிந்து, கைம்மாறு வேண்டாமல், தகுந்த இடமும், காலமும், பாத்திரமும் நோக்கிச் செய்யப்படும் தானம் சாத்விக தானமாகும். [17-20]

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥



கைம்மாறு வேண்டியோ, பயனைக் கருதியோ, மனதில் வருத்தத்துடனே கொடுக்கப்படும் தானம் ராஜஸமாகும். [17-21]

अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥

தகாத இடத்தில், தகாத காலத்தில், தகாதாருக்குச் செய்யப்படுவதும், மதிப்பின்றி இகழ்ச்சியுடன் செய்யப்படுவதுமாகிய தானம் தாமஸ தானமாகும். [17-22]

**நா**ம் தினமும் உண்ணும் உணவு நம்முடைய குணங்களைத் தொடர்ந்து ஓரளவு அவைகளை மேல் தூக்கவும் கீழேதள்ளவும் செய்கின்றது. சாத்விக உணவு எது, சாந்த சித்தத்திற்குத் தடையான ராஜஸ உணவு எது, புத்தியைக் கொல்லும் தாமஸ உணவு எது என்பன ஒருவாறு கீதையில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु ॥

வேள்வியும், தவமும், தானமும் மும்மூன்று வகையாக அமையும். அவரவருக்குப் பிரியமான உணவும் மூன்று வகைப்படுகிறது. அவற்றின் வேற்றுமையைக் கேள்: [17-7]

आयुः सत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्त्विकप्रियाः ॥

ஆயுள், சக்தி, பலம், நோயின்மை, சுகம், பிரீதி, இவற்றை விருத்திப் படுத்துவன; ரஸ முடையன; பிசினுள்ளவை; உறுதியாயிருப் பன; மகிழ்ச்சி தருவன; இவ்வுணவுகள் சத்வ குணமுடையோருக்குப் பிரியமா யிருக்கும். [17-8]

कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः ।
आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥

கசப்பும், புளிப்பும், உப்பும், அதிக உறைப்பும், அதிகச் சூடும் கொண்டன; உலர்ந்து போனவை; எரிச்சலுண்டாக்குவன; இவ்வுணவுகளை ரஜோகுணத்தோர் விரும்பு வார்கள். இவை துக்கம், சோகம், நோய் இவற்றிற்குக் காரணமாகும். [17-9]

यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥

பழையவை, ரஸம்போனவை, அழுகிய, வை கெட்டுப் போனவை, எச்சில், அசுத்த மானவை, இத்தகைய உணவுகளிலே தமோ குணமுடையோர் பிரியம் கொள்ளுவார்கள். [17-10]

பல்லாயிரம் வருஷங்களுக்குமுன் எழுதப்பட்ட சுலோகங்கள் இவை என்பதை நினைவில் வைத்துக் கொண்டு இவைகளின் சாராம்சத்தைக் கிரகித்து, ஜனசரி வாழ்க்கையை நடத்திவரவேண்டும்.

# 24

## பிரபத்தி

[கீதை அத்தியாயங்கள் 9, 10, 12, 14, 18.]

அவ்யக்த பிரம்மத்தை தியானிப்பது கடினம். ஸர்வ கல்யாண குணங்களும் பொருந்திய சர்வேசு வரனை உபாஸித்தலே சுலபமான வழி. கர்மயோக மார்க்கத்தில் சொல்லியவாறு சுயநலமற்று, பற் றற்று, சமசித்தத்துடன் கடமைகளைச் செய்வதோடு கருணாமூர்த்தியான நாராயணனுக்கே நாம் செய்யும் கருமங்களை யெல்லாம் அர்ப்பணமாகச் செலுத்தி விடவேண்டும். முடிவில் அவன் அருள்தான் நம் மைக் காப்பாற்றும்; வேறில்லை. அவன் அருள் இருந்தால் புலன்களை அடக்கியாள முடியும்; சம உணர்ச்சியும் சாந்தமும் மனதில் அமைத்துக் கொள்ள முடியும். ஆசை, ஐயம், மயக்கம் இவற்றி னின்று நம்மைக் காப்பாற்றிக்கொள்ளப் பகவானு டைய அருள் இல்லாமல் முடியாது. ஆகையால் எக் கருமத்தைச் செய்யும்போதும் ஈசுவரனை உத்தே சித்து அவனுக்கு அர்ப்பணமாய் அதைச் செய்ய வேண்டும்.

இதுதான் பக்தி மார்க்கம் என்பது. இது கர்மயோகம் என்று சொல்லப்பட்ட மார்க்கத்திற் குப் பதிலாகக் கொள்ளக்கூடிய ஒரு தனி மார்க்க மல்ல. கர்மயோகத்தில் சொல்லப்பட்ட மனோபாவ மில்லாதவன் பக்தியோகம் செய்யமுடியாது. ஈசுவர

நினைவும், பக்தியும் இல்லாதவன் கர்மயோக முறையை அனுஸரிப்பதும் அரிது. பக்தியோகமும் கர்மயோகமும் ஒன்றுக்கொன்று துணை. படிக்கும்போது வித்தியாசம் தோற்றினும், சரிவர அப்பியஸிக்க முயன்றால் இரண்டும் ஒன்றே என்பது விளங்கும்.

ஸ்ரீமந் நாராயணனைச் சரண் அடைவதே எல்லா மார்க்கங்களுக்கும் முடிவு. மற்ற மார்க்கங்களைப்பற்றி விவகரித்துக் கொண்டிருப்பதில் பயனில்லையென்பது கீதையின் முடிவான உபதேசம். எத்தகைய பாபியாயிருந்தாலும் பகவானை மனப்பூர்வமாகச் சரணமடைந்தவன் நாசமடைய மாட்டான். எத்தகைய ஞானியாயிருந்தாலும் அவனைச் சரண்புகாமல் ஈடேற முடியாது.

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥

அவ்யக்தத்தில் மனம் ஈடுபட்டோர்க்குத் தொல்லை யதிகம். உடம்பெடுத்தோருக்கு அவ்யக்த உபாஸனை மிகவும் கஷ்டம். [12-5]

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥
तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि न चिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥



எல்லாத் தொழில்களையும் எனக்கென்று விட்டு, மனதை என்னிலே மூழ்குவித்து, பிறழாத யோகத்தால் என்னைத் தியானித்து வழிபடுவோரை, [12-6]

என்பால் அறிவைப் புகுத்திய அன்னோரை, மரணம், ஸம்ஸாரம் என்ற கடலினின்று விரைவில் கை தூக்கிவிடுகிறேன். [12-7]

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान्समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥

தவறாத பக்தியோகத்தால் என்னை உபாஸிப்பவனும் குணங்களைக் கடந்து பிரம்ம நிலையடையத் தகுதி பெறுவான். [14-26]

मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥

என் பக்தர்கள், சித்தத்தை என்பால் செலுத்தி, உயிரை என்னுள்ளே புகுத்தி, என்னைப்பற்றி ஒருவரோடொருவர் பேசி அறிவூட்டிக்கொண்டு, திருப்தியும் மகிழ்ச்சியும் அடைவார்கள். [10-9]

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥

எப்போதும் உள்ளத்தை யடக்கி, அன்புடன் என்னை வழிபடும் அன்னோருக்கு நான்

புத்தியோகம் அளிப்பேன். அதனால் அவர்கள் என்னை யடைவார்கள். [10-10]

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥

அன்னவர்க்கு இரங்கி யான், அன்னவர் மனோபாவங்களில் புகுந்து பிரகாசிக்கும் ஞானவிளக்கத்தால் அவருடைய அஞ்ஞான இருளைத் தொலைப்பேன். [10-11]

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥

வேறு எதையும் சிந்தியாமல் என்னை உபாஸிப்பவரான நித்திய யோகிகளின் யோகக்ஷேமத்தை நானே பொறுப்பேன். [9-22]

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥

ஈசுவரனையே முற்றிலும் சரண் அடைவாயாக. அவனருளால், அனைத்தையும் கடந்த சாந்தியையும் சாசுவத ஸ்தானத்தையும் அடைவாய். [18-62]

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥

மீண்டு மொருமுறை எல்லாவற்றிலும் ஆழ்ந்த ரகசியமாகிய எனது பரம வசனத்



தைக் கேள். எனக்கு நீ அன்பன். ஆதலால் உனக்கு ஹிதத்தை உறுதியாய்ச் சொல்லுகிறேன். [18-64]

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥

உன் மனதை எனதாக்கி விடு. என்மேல் பக்தி செலுத்து. எனக்கெனவே வேள்விகளை யெல்லாம் செய். என்னையே வணங்கு. என்னை எய்துவாய். இது உண்மை; உனக்கு உறுதி கூறுகிறேன். நீ எனக்குப் பிரியமானவன். [18-65]

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥

மற்றெல்லா நெறிகளையும் விட்டுவிட்டு என்னையே சரண்புகு. எல்லாப் பாவங்களினின்றும் நான் உன்னை விடுவிக்கிறேன்; துயரப்படாதே. [18-66]

# 25

## அனைத்தும் ஒன்று

[கீதை அத்தியாயங்கள் 5, 6, 8, 13, 18.]

ஒழுக்கத்தையும் மனதையும் காத்து, செய்யும் கருமங்களைப் பகவானுக்கு அர்ப்பணமாகவே செய்துவந்தால், எல்லா உயிரும் ஒன்றே யென்கிற ஞானப்பிரகாசம் உண்டாகும். தான் என்பதும், மற்றவர்கள் என்பதும் ஒழிந்து, எல்லா உயிரும் பரமாத்மாவில் நிற்கும் மனோபாவத்தை அடைவதே கீதையில் செய்யப்பட்ட உபதேசத்தின் நோக்கம். ஆத்மாவை அஞ்ஞானமானது சூழ்ந்துகொண்டு ஞான ஒளியை மறைக்கிறது. இந்த அஞ்ஞானத்தைப் போக்கி ஆத்மாவில் ஞானப்பிரகாசம் உதயமாகச் செய்துகொண்டால், அப்படிப்பட்டவன் கண்ணுக்கு, வித்தையும், கலைகளும் சீலமும் அடைந்த பண்டிதனும், யாதும் கல்லாத ஒரு பிராகிருதனும், ஒருவராகவே தோன்றுவர்; அதாவது, இவ்விருவருள்ளும் வாஸுதேவனைக் காண்பான். மனிதர்களில் மேலோன், கீழோன் என்கிற வித்தியாசம் ஒழிந்துபோகும். பிராணிகளுடைய அங்க வித்தியாசங்களுங்கூட ஞானமடைந்தவன் கண்ணுக்கு வித்தியாசமாகத் தோன்றா. மாடு, யானை, நாய், நாயைத் தின்போன், படிப்பும் விநயமும் அடைந்த பிராமணன், இவர்களுக்குள் அவயவ அமைப்பு முதலிய சகல வித்தியாசங்களும் அவன் காட்சியில் ஒழிந்து எல்லாம் ஒன்றாகத் தோன்றும்.



ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥

அஞ்ஞானத்தை ஆத்ம ஞானத்தால் அழித்தவர்களுடைய ஞானம் சூரியனைப்போல் பிரகாசித்துப் பரம்பொருளைக் காட்டும். [5-16]

विद्याविनयसम्पन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥

கல்வியும் விநயமும் பெற்ற பிராமணனையும், பசுவையும், யானையையும், நாயையும், நாயைத் தின்போனையும், அறிவடைந்தோர் சமமான பார்வையுடன் பார்ப்பர். [5-18]

यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।
तत एव च विस्तारं ब्रह्म सम्पद्यते तदा ॥

பலவகைப்பட்ட உயிர்களும் ஒரே ஆதாரத்தின் மேல் நிலைகொண்டிருக்கின்றனவென்பதை அறிவானாயின், அப்போது அந்த ஞானத்தின் பயனாய் எங்கும் பரந்த பிரம்மத்தைக் காண்கிறான். [13-31]

सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।
अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥

பிரிவுபட்டு நிற்கும் எல்லா உயிர்களிலும், பிரிவற்றதும் நாசமற்றதுமான ஒரே வஸ்து

வைக் காணும் ஞானம் சாத்விக ஞானமென்று அறிவாய். [18-20]

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥

யோகமுறையில் தேர்ந்தவன் எங்கும் சமமான பார்வை கொண்டவனாய் எல்லாவுயிர்களிலும் தன் உயிர் உளதாகவும், தன்னுள் எல்லா உயிர்களும் இருப்பதாகவும் காண்பான். [6-29]

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥

எவன் எங்கும் என்னைக் காண்கிறானோ, எவன் எல்லாவற்றையும் என்னிடத்தே காண்கிறானோ, அவனுக்கு நான் ஒருபோதும் இல்லாமலிருப்பதில்லை; எனக்கும் அவன் ஒருபோதும் இல்லாமல் போகமாட்டான். [6-30]

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥

ஒருமையில் நிலைகொண்டவனாய் எல்லா உயிர்களிடத்திலுமுள்ள என்னைத் தொழுவோன், எத்தொழில் செய்தபோதிலும் யோகியாவான்; என் வழியில் செல்பவனாவான். [6-31]



கீதையில் தன்னடக்கத்தைப் பற்றியும் ஞானோதயத்தைப் பற்றியுமிருக்கும் உயர்ந்த உபதேசங்கள் வெறுமனே, புஸ்தக பூஷணமாகவோ, அல்லது படித்து மனனம் செய்து காலத்தைக் கழிக்கவோ சொல்லப்பட்டவை அல்ல. உண்மையில் சாதாரண ஜனங்கள்-ஆண்களும், பெண்களும் - அதில் சொல்லியபடி வாழ்க்கை நடத்த வேண்டுமென்ற உத்தேசத்தைக் கொண்டு உபதேசிக்கப்பட்டவை. வேதாந்த பாண்டித்தியத்தைக் காட்டிச் சந்தோஷப்பட எழுதியது அல்ல. வயதுமுதிர்ந்தவர்களும், இளைஞர்களும், லௌகிக விஷயங்களில் ஈடுபட்டவர்களும் உட்பட எத்தசையிலுள்ளவர்களுக்கும் பயன்படச் செய்யப்பட்ட உபதேசம்; எல்லாக் காலத்திற்காகவும் சொல்லப்பட்டது. ஒரு தனிப்பட்ட சந்தர்ப்பத்திற்காக மட்டும் சொன்ன உபதேசமல்ல.

மற்ற மத நூல்களைப்போல் கீதையும் சாசுவத தருமத்தை உபதேசிக்கும் ஒரு நூலாயினும், எழுதிய காலத்தில் எத்தகைய பழக்க வழக்கங்கள் அனைவரும் அனுசரித்து வந்தார்கள், அக்காலத்தில் சமுதாய அமைப்புக்கிரமம் என்னவாயிருந்தது, என்பதை நினைவில் வைத்துக்கொண்டால்தான், உபதேசத்தின் உண்மைப் பொருளைக் கிரகிக்க முடியும்.

தற்காலத்தில் உண்டாயிருக்கும் சில இயக்கங்கள் அக்காலத்திலில்லை என்பதை மறந்துவிடக்

கூடாது. ஜாதி வித்தியாசங்களை யொழித்து அனைவரும் ஒரு ஜாதியாக இருக்கவேண்டும் என்னும் இயக்கத்திற்கும், தீண்டாமையை ஒழித்து ஹரிஜனங்களையும் மற்ற ஜாதியாருடன் சமமாக்கவேண்டும் என்னும் இயக்கத்திற்கும், சுலோகங்களை ஆதாரமாக எடுத்துக் காட்டுவதற்காகப் பகவத் கீதை எழுதப்பட்டதல்ல. அப்படி ஆதாரமாக எடுத்துச் சொல்லக் கீதையில் சரியான சுலோகங்களில்லையே யென்பது, பல்லாயிர வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட ஒரு நூலைப்பற்றி நியாயமான ஆக்ஷேபமும் ஆகாது.

ஆயினும் இவ்வித சமத்வ இயக்கங்களுக்குங் கூடப் போதிய உதவிதரக்கூடிய பிரமாணங்களும் கீதையில் இருந்து வருகின்றன என்பதைக் கவனிக்கவேண்டும். எல்லா ஸமூதாயங்களிலும் தொழில் ஒழுங்கு முறையானது முக்கியமான அம்சம். இது ஜாதிக் கிரமமாக, அதாவது அந்த அந்த ஜாதிக்கு அந்த அந்த வேலையென்ற முறையாகவு மிருக்கலாம்; அந்த அந்தக் குடும்பம் அந்த அந்த வேலைக்கு என்றும் இருக்கலாம்; அல்லது பிறப்பு முறையை நீக்கி, வேறு முறையாகவும் இருக்கலாம்; எந்த முறையை அனுஸரித்தாலும் கீதா வாக்கியங்களின் தத்துவம் முற்றிலும் பொருந்தும். இந்த வேலை உயர்ந்தது, இதுதான் நல்லது, இதைச் செய்வேன், எனக்கிட்ட வேலை வேண்டாம், என்று யாரும் சொல்லல் கூடாது; இதுதான் கீதாவாக்யம். சமுதாய



வாழ்க்கைக்கு அவசியமான தொழில்களில் ஏற்றத் தாழ்வு இல்லை. இது எக்காலத்திற்கும் எந்தச் சமுதாய முறைக்கும் பொருந்தும். பழைய காலத்திய ஜாதியமைப்புக்கும், ருஷியாவில் நடைபெற்றுவரும் பொதுவுடைமை அமைப்பிற்கும் சமமாகப் பொருந்தும். நெருப்பில் புகை இருப்பதுபோல் உலகத்தில் செய்யக்கூடிய எல்லாத் தொழிலிலுந்தான் குற்றம் தோன்றும். எத்தொழிலையும் புனிதமாக்கக்கூடியதொன்றுண்டு. தனக்கென்று லாபமோ சுகமோ தேடாமல், சமுதாய வாழ்க்கைக்காகக் கடமையைச் செய்கிறேன் என்ற மனோபாவந்தான் அது. அதுவே சகல கல்மஷத்தையும் போக்கக்கூடிய கங்கா தீர்த்தம். இதுவே கீதாவாக்கியத்தின் முக்கிய அம்சம். அக்காலத்தில் ஜாதிக்கிரமமாகத் தொழில் வகுக்கப்பட்டிருந்ததை வைத்து முக்கிய தத்துவத்தை வற்புறுத்தி உபதேசம் எழுதப்பட்டிருக்கிறது. ஆயினும் தத்துவம் எவ்விதத் தொழிற் பாகுபாடுக்கும் பொருந்தும். நிற்கும் சுவரின்மேல் சித்திரம் எழுதப்படும். படத்தைக் கவனிக்கவேண்டுமேயொழியச் சுவரின் அமைப்பல்ல, கவனிக்கவேண்டிய பொருள். அக்காலத்தில் வழங்கிய வழக்கங்களையும் நடைபெற்று வந்த சமுதாய முறையையும் வைத்துச் சிறந்த சமத்துவ உண்மை போதிக்கப்பட்டது. அந்தத் தத்துவத்தை உணரவேண்டும்.

स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥

தனக்குரிய தொழிலில் மகிழ்ச்சியுறும் மனிதன் சித்தி பெறுகிறான். தத்தமக்குரிய தொழிலில் இன்புறுவது சித்தி யடையும் வழி யெவ்வாறாகும் என்பதைக் கேள்: [18-45]

यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥

தமக்குரிய தொழிலைச் செய்வதே, உயிர்களுக்கெல்லாம் பிறப்பிடமாய், இவ்வையக மனைத்தும் பரவி நிற்கும் பகவானைப் பூஜை செய்வதாகும்; அதனால் மனிதன் சித்தியடைகிறான். [18-46]

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥

பிறர்க்குரிய தர்மத்தை நன்கு செய்வதைக்காட்டிலும் குணக்குறைவானதாயினும் தனக்குரிய தர்மத்தைச் செய்தல் நன்று. தன் சுபாவத்தினாலேற்பட்ட தொழிலைச் செய்வதனால், அத்தொழிலின் இயல்பிலுள்ள தோஷத்தை ஒருவன் அடையமாட்டான். [18-47]

सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।
सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥

கூடப்பிறந்த தொழில் குறையுடையதாயினும், அதைக் கைவிடலாகாது. தீயைப் புகை



சூழ்ந்திருப்பதுபோல், எல்லாத் தொழில்களையும் குறைகள் சூழ்ந்தே நிற்கின்றன. [18-48]

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥

எத்தொழில் செய்யும்போதும் தனக்கென்று பற்றில்லாத மதியுடையோனாய், தன்னைத்தான் வென்று, ஆசைகளை நீக்கி நின்றால் அத்துறவினால் செயலிலாமையின் நோக்கமாகிய உயர்ந்த சித்தியை யடைவான். [18-49]

**உ**லகத்தில் காணப்படும் தோற்றங்களின் பல்வேறு வித்தியாஸங்களுக்கும் பின்னால் மறைந்து கிடக்கும் பரம்பொருளைச் சிந்திக்கவேண்டும். பிறப்பும், இறப்பும், தோற்றமும், மறைவுமே யாகும். குழந்தைகளுக்குப் பகலும் இரவும் எப்படியோ அப்படியே உலகத்தில் தோற்றமும் நாசமும். பிரம்மா கண் மூடுவதும் விழிப்பதுமே, சிருஷ்டியும் நாசமும். ஞானேதயம் அடைந்த மனிதனுடைய புலனுக்குத் தோன்றுவன அனைத்தும், மனதிலுண்டாகும் உணர்ச்சிகள் அனைத்தும், செய்யும் கருமங்கள் அனைத்தும், பரம்பொருளின் உருவங்களேயாகும். பலகோடி தோற்றங்களும் ஒன்றே என்பதைக் காண்பான். யோகத்தின் முடிவு இதுவே.

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥

பகல் வந்ததும் அவ்யக்தத்தினின்று உருக்கள் தோன்றுகின்றன. இரவு வந்தவுடன் மீண்டும் அவ்யக்த மென்பதற்குள் கரைந்து மறைந்து போகின்றன. [8-18]

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥

இந்தப் பூதத்தொகுதி திரும்பத்திரும்ப தன் வசமின்றியே இரவு வந்தவுடன் அழிகிறது. பகல் வந்தவுடன் மீண்டும் உண்டாகிறது. [8-19]

परस्तस्मात्तु भावोऽन्यो ऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥

அவ்யக்தத்தினும் அவ்யக்தமாய், அதற்கும் மேலான, மாற்றமில்லாத பொருள் ஒன்றிருக்கிறது. எல்லா உயிர்களும் அழிகையில் அது அழியாது. [8-20]

पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥

வேறு பொருளில் செல்லாத பக்தியால் அந்தப் பரம்புருஷனை அடையலாம். அவனுள்ளே எல்லாப் பொருள்களும் நிலைகொண்டன. அவன் இவ்வுலகமெங்கும் பரவி நிற்கிறான். [8-22]



कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥

பேரறிவாளனை, பழையோனை, ஆண்டவனை, அணுக்குள் அணுவான பரம்பொருளை, எல்லாவற்றையும் தரிப்பவனை, எண்ணுதற்கரிய வடிவுடையோனை, கதிரவன் ஒளி கொண்டு இருளைத் தாண்டி நிற்பவனை, எவன் தியானிக்கிறானோ, [8-9]

प्रयाणकाले मनसाऽचलेन
भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक्
सत परं पुरुषमुपैति दिव्यम् ॥

அவன் இறுதிக் காலத்தில் சஞ்சலமற்ற மனதுடன், புருவங்களினிடையே பிராணனை நிறுத்திக்கொண்டு, யோக பலத்தாலும் பக்தியாலும் அந்தத் திவ்ய பரமபுருஷனை அடைகிறான். [9-10]

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायाऽऽत्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥

மனதின் எல்லா வாயில்களையும் நன்கு மூடி, மனதை அகத்திலேயே நிறுத்தி, தன் பிராணனைத் தலையின் உச்சியில் நிறுத்தி யோகநிலை தரித்து. [8-12]

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देह स याति परमां गतिम् ॥

ஓம் என்ற சிறந்த ஏகாக்ஷர வேதத்தை ஜபித்துக்கொண்டு என்னை ஸ்மரிப்பவனாய் உடலைத் துறப்போன் பரமகதி பெறுகின்றான். [9-13]

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥

வேறு நினைப்பின்றி என்னை எந்நாளும் எப்போதும் ஸ்மரிக்கும் நித்ய யோகிக்கு நான் எளிதில் கிடைப்பேன். [8-14]

वेदेषु यज्ञेषु तपःसु चैव
दानेषु यत्पुण्यफल प्रतिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा
योगो परं स्थानमुपति चाद्यम् ॥

இதனை யறிந்த யோகி, வேள்விகளாலும் தவங்களாலும் தானங்களாலும் அடையக் கூடியதாக வேதங்களில் சொல்லப்படும் ஆதி நிலையாகிய பரமபதத்தை அடைகிறான். [8-28]

**சா**கும் தறுவாயிலுங்கூட மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டு பகவானைத் தியானித்து உயிர் விட்டால் பரகதி அடையலாம் என்பது மேலே, 9, 10, 12,



13 - ஆம் சுலோகங்களில் சொல்லப்பட்டது. ஸநாதனக் கொள்கை; இதன் பொருள் என்னவென்றால் :—

(1) எவ்வித வாழ்க்கை நடத்தியவனுக்கும் கதி உண்டு. 'ஒரு தருமமும் செய்யவில்லையே, ஒரு புண்ணிய தீர்த்தத்திலும் முழுகவில்லையே, பலபெரும் பாவங்களைச் செய்தேனே, அவகாசம் தராமல் மரணம் வந்ததே' என்றிவ்வாறு ஏக்கப்படவேண்டியதில்லை. உயிர்விடும் சமயத்திலேனும் பகவானிடம் உள்ளம் கரைந்த பக்தி செலுத்தினால் அதுவே நற்கதியைக் கொடுக்கும். தைரியமாகவும் பக்தியுடனும் மரணத்தை எதிர்கொள்ள வேண்டும்.

(2) சாகும் தறுவாயிலுங்கூடப் பல பற்றுக்களை மனதில் வைத்துக்கொண்டு, உயிரைவிட மனமில்லாமல் துக்கப்பட்டுக்கொண்டு உயிர் நீத்தல் முறையல்ல. பகவானைத் தியானம் செய்துகொண்டு உயிர் நீத்தலே நலம் என்பது இரண்டாவது.

(3) மரணம் எப்போது வரும் என்று சொல்ல முடியாது. எத்தருணத்திலும் மரணம் வரலாம். ஆகையால், மரணகாலத்தில் இவ்விதமாய் மனதை நிறுத்திப் பகவானைத் தியானித்தல் வேண்டும் என்ற நினைவு சதாகாலமும் அவ்விதமிருக்க ஏதுவாகும் என்பது மூன்றாவது.

# 26

## அத்துவைதமும் கர்ம யோகமும்

இச்சந்தர்ப்பத்தில் ஒரு கேள்வி பிறக்கும்: அத்துவைதத்தைப்பற்றிக் குருவின்மூலம் உபதேசம் பெறாமல் அந்தச் சித்தாந்தத்தில் சில பாகம்மட்டும் கேள்விப்பட்டுத் திருப்தியடைந்தவர்களுக்குஒரு சந்தேகம் தோன்றலாம். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் தனியல்ல; இரண்டும் ஒன்றே என்கிற மதம் உண்மையானால், இந்திரியங்களை யடக்கல் முதலிய சிரமமான இந்த முறைகள் என்னத்திற்காக? தானே பிரம்மம் என்று அறிந்தவுடன் வேறு ஒன்றும் கவலைப்படாமல் இருக்கலாமே?

இது உண்மைதான்; ஆனால் கண்ணைமட்டும் ஏமாற்றும் ஒரு பொய்த் தோற்றத்தை இவ்வாறு உதாசீனமாய் விட்டுவிடக்கூடும் அத்துவைத வேதாந்தத்தில் சொல்லப்பட்ட அவித்தை அவ்வித லேசான ‘டாக்கி’ தோற்றமல்ல. கண், செவி, மூக்கு, தேகத்திலுள்ள சகல உணர்ச்சிகள், அந்தரங்க மனம், புத்தி, அனைத்தையும் கவர்ந்த இந்த அவித்தையானது, தேகத்தையும், புத்தியையும், ஆத்மாவையும் ஊடுருவி அனைத்திலும் கலந்து நிற்கிறது.

கண்ணைத் தேய்த்துக்கொண்டு ‘இது வெறுந் தோற்றந்தான்’ என்று சொன்ன மாத்திரத்தில்



முடிந்துபோகாது. உடம்பிலும் மனதிலும் உள்ள ஒவ்வொரு சூக்ஷ்ம அணுவையும் தட்டியெழுப்பி, மயக்கம் தெளியச் செய்யவேண்டியதா யிருக்கிறது. அதற்கு ஒழுக்கம், இந்திரிய நிக்ரஹம், பற்றறுத்தல் எல்லாம் வேண்டும். மாயையிலிருந்து கண் விழிக்க வேண்டும் என்று உண்மையை அறிந்தால் மட்டும் போதாது. மாயையிலிருந்து நீங்கவேண்டும் என்று அறிவது ஒன்று; அறிந்த வண்ணம் நீங்குவது வேறு. நான் காலையில் நாலுமணிக்கு எழவேண்டும் என்று எண்ணுவது ஒன்று, அப்படி விழித்து எழுந்திருப்பது வேறு. அவித்தையை உண்மையில் நீத்தல்தான் மோக்ஷம். அதற்குத்தான் வழி யோகம். அத்துவைதத்தின்படி, ஜீவனை அவித்தையிலிருந்து விடுவிப்பதற்கும், துவைதத்தின்படி ஜீவனைக் கர்ம பந்தத்திலிருந்து நீப்பதற்கும், இரண்டுக்கும் வழி ஒன்றே. அத்துவைத வாக்கியத்தைக்கேட்டு ‘ஆம்’ என்று புத்தியானது சொன்னதுமே, அவித்தை நீங்கவில்லை. உண்மையில் அது நீங்கவேண்டுமானால் கர்மபந்தத்திலிருந்து மோக்ஷமடையத் துவைதவாதிகள் என்னென்ன செய்ய வேண்டும் என்கிறார்களோ,அவ்வளவும் அத்துவைதவாதியும் செய்யவேண்டும்; இப்படிச் செய்தால்தான் மோகமானது நீங்கும். ஆகவே கர்மபந்தமும், அதை நீக்கிக்கொள்ளும் வழிகளும், துவைதக் கொள்கையினாலாவது அத்வைதக் கொள்கையினாலாவது வித்தியாசப்படா. இதுவே ஆசார்யர்களின் உபதேசம்.

எல்லா உயிர்களின்பாலும் ஜீவகாருண்ய உணர்ச்சிகூட மனதில் உண்டாகாமலிருக்கையில், ஜீவனும் பரமாத்மாவும் ஒன்று என்ற அத்வைத ஞானம் எவ்வளவு தூரம்? ஆசார்யர்கள் எழுதிய நூல்களிலிருந்து ஜீவனும் பிரம்மமும் உண்மையில் ஒன்று என்று மதக்கொள்கையாகத் தெரிந்து கொள்வது வேறு; உண்மையான ஞானப்பிரகாசம் வேறு. ஞானப்பிரகாசம் அடைவதற்கு அறிவு தேவையே; ஆனால் அறிவு மட்டும் போதாது.

नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः ।
नाशान्तमानसो वापि प्रज्ञानेनैनमाप्नुयात् ॥

தீய ஒழுக்கத்தை விடாதவனும், மனதில் சாந்தம் பெறாதவனும், இந்திரியங்களை அடக்காதவனும், ஆசை யெண்ணங்களை விடாதவனும், அறிவு பெற்றாலும் ஆத்மாவைக் காண மாட்டான்: — கடோபனிஷத்து [2-24]

நியமம், இந்திரியங்களை அடக்கியாள்வது, மனதை விஷயங்களில் செல்லாமல் தடுப்பது, கடமைகளைச் சுயநல ஆசையும் பற்றுகளுமின்றிப் பகவானுக்கு அர்ப்பணமாகச் செய்துமுடிக்கப் பழகுவது, சுக துக்கங்களையும் இன்ப துன்பங்களையும் ஒரே மாதிரி ஏற்பது, இந்த அப்பியாசங்களெல்லாம் அவித்தையை நீக்கிக்கொண்டு அத்துவைத மனோபாவத்தை அடைவதற்குச் சாதனங்கள்; மோகத்திற்கும் பேதபுத்திக்கும் சிகிச்சைக் கிரமங்



கள். இவற்றைக் கைக்கொள்ளாமல் விஷயங்களை அனுபவிப்பதில் ஆசையைச் செலுத்தி, மனதை அடக்காமலிருந்தால், பிரம்மமும் ஜீவனும் ஒன்று என்ற உண்மையறிவு ஒரு நாளும் உண்டாகாது. பத்தியமில்லாததால் வியாதி அதிகரிப்பதுபோல், வர வர மயக்கமும் பேத புத்தியும் அதிகரிக்கும். நூல்களினின்று தெரிந்துகொண்ட மருந்து, பத்தியமின்றி ஞானத்தை உண்டாக்காது. படத்துக்கும் உயிருள்ள மனிதனுக்கும் இருக்கும் வித்தியாசத்தைப் போலாகும், அத்தகைய உபயோகமற்ற அறிவுக்கும் உண்மையான அத்துவைத ஞானப்பிரகாசத்திற்குமுள்ள பேதம். உண்மையான அத்துவைத ஞானம் உதயமானால், வாழ்க்கை தானாகவே சுத்தப்பட்டுப்போகும்; விஷயப் பற்றுகள் கரைந்து போம். விஷயப் பற்றுகள் தீரத் தீர ஞானம் பின்னும் வளரும்.

இதனாலேதான் பகவத்கீதையானது துவைத, அத்வைத, விசிஷ்டாத்வைத மதங்களைச் சேர்ந்தவர்கள் அனைவருக்கும் சாஸ்திரமாக இருந்து வருகிறது. பிரம்மமும் ஜீவனும் ஒன்றா, வெவ்வேறா என்கிற பிரச்னை, பகவத்கீதையில் உபதேசிக்கப்பட்ட அனாஸக்த கர்மயோகம், ஞானயோகம், பக்தி யோகம், பிரபத்தி மார்க்கங்களை ஒரு விதத்திலும் பாதிக்காது.

# 27

## விச்வரூப தரிசனம்

பகவத்கீதை 11-வது அத்தியாயத்தில், பகவான் அருச்சுனனுக்கு விச்வரூப தரிசனம் காட்டியதாகச் சொல்லப்படுகிறது. நன்மை தீமை, சுகம் துக்கம், இருள் தேஜஸ் என்ற துவந்தங்கள் கடந்துநிற்கும் பகவானுடைய சர்வ வியாபகமான விச்வரூபத்தை அருச்சுனன் பார்க்குமாறு அவனுக்கு ஞான திருஷ்டி யருளித் தரிசனம் தந்தார் என்று சொல்லப்படுகிறது.

இதன் பொருள் என்ன? ஆகத் தூய்மையும் புறத் தூய்மையும் கொண்ட சுத்த வாழ்க்கையை ஒருவன் நடத்தி, ஸகல கருமங்களையும் பற்றின்றிப் பகவானுக்கு அர்ப்பணம் செய்து, புத்தியை ஸ்திரமாக நிறுத்திக்கொண்டு, அடிக்கடி தியானம் செய்துவந்தால், பக்தனுக்குப் பகவானுடைய விச்வரூபம் வெளியாகும்: அதாவது, ஞானேதயமாய், பகவானை அனுபவிப்பான் என்பதே. அந்தத் தரிசனத்தைப்பற்றிச் சஞ்சயன் சொல்லுகிறான்:

सञ्जय उवाच ।

एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥



அரசனே, இவ்வாறுரைத்துவிட்டு, அப்பால் மகா யோகேசுவரனான ஹரி, தன் பரம ஐசுவர்ய ரூபத்தைப் பார்த்தனுக்குக் காட்டினான். [11-9]

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥

வானத்தில் ஒரே க்ஷணத்தில் ஆயிரம் சூரிய பிம்பங்கள் கிளம்பினால் அவ்வொளியை அந்த மகா உருவத்தின் ஒளிக்கு ஒருவாறு நிகராகக் கூறலாம். [11-12]

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥

அப்போது பலபகுதிகளாக விருந்த ஜகத் சிருஷ்டி முழுதும் அந்தத் தேவதேவனுடைய சரீரத்தில் ஒன்றுகூடி நிற்பதைப் பாண்டவன் கண்டான். [11-13]

அருச்சுனனுடைய ஸ்துதி:—

अर्जुन उवाच ।

पश्यामि देवांस्तव देव देहे
सर्वांस्तथा भूतविशेषसंघान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थ-
मृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥

தேவனே, உன் தேகத்தில் எல்லாத் தேவர்களையும் காண்கிறேன். பூத வகைகளின் தொகுதிகளை யெல்லாம் காண்கிறேன். கமலாஸனப் பிரமனாகிய ஈசனையும், எல்லா ரிஷிகளையும் திவ்ய ஸர்ப்பங்களையும் உன்னில் காண்கிறேன். [11-15]

अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।
नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप ॥

பலதோளும், பலவயிறும், பல வாயும், பல கண்களுமுடைய எல்லையற்ற வடிவிலே நின்னை எந்தத் திக்கு நோக்கினும் காண்கிறேன். எல்லாவற்றிற்கும் ஈசனே, விசுவத்தை வடிவாகக் கொண்டவனே, உனக்கு முடிவேனும், இடையேனும், தொடக்கமேனும் காண்கிலேன். [11-16]

किरीटिनं गदिनं चक्रिणंच
तेजोराशि सर्वतो दीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्तात्
दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥

கிரீடமும், கதையும், சக்கரமும் தரித்தவனாய், தேஜோராசியாய், எப்பக்கமும் ஒளி வீசுகிறாய்; தழல் விட்டெரியும் தீயைப்போலும் ஞாயிற்றைப்போலும் பார்க்கமுடியாத ஒளி வீசுவதைக் காண்கிறேன். [11-17]



त्वमक्षरं परमं वेदितव्यं
त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता
सनातनस्त्वं पुरुषो मतो मे ॥

அழிவிலாய், அறிதற்குரிய பொருள்களில் பரமனே, உலகத்தின் அகமே, கேடிலாய், என்றும் இயலும் தருமத்தைக் காப்பவனே, மாறுதவனே, உன்னைக் கண்டுகொண்டேன். [11-18]

त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्ताऽसि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप ॥

நீ ஆதிதேவன்; ஆதி ஆத்மா; நீயே அகிலத்தின் பரம நிலயம், அறிவோனே, அறியப்படு பொருளே, பரமபதமே, அனந்த ரூபா, உலகமனைத்தும் ஊடுருவிப் பரந்து கிடக்கிறாய். [11-38]

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः
प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः
पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥

வாயுவும் நீயே; யமனும் நீயே; அக்கினியும் நீயே; வருணனும் திங்களும் பிரமனும் நீயே.

உன்னை ஆயிரமுறை நமஸ்கரிக்கின்றேன். மீண்டும் மீண்டும் உன்னை வணங்குகின்றேன். [11-39]

नमः पुरस्तादथ पृष्ठतस्ते
नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं
सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥

முன்புறம் உனக்கு நமஸ்காரம்; பின்புறம் நமஸ்காரம். எல்லாமாவாய்! உன்னை எல்லாப்புறமும் கும்பிடுகிறேன். எல்லை கடந்த வீர்யமுடையாய், அளவுகடந்த வலிமையுடையாய், அனைத்தின் பூரணமுமாவாய், அனைத்துமாவாய் நீயே. [11-40]

पिताऽसि लोकस्य चराचरस्य
त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो
लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥

சராசர உலகனைத்திற்கும் தந்தையாவாய், பூஜ்யனே, மிகச் சிறந்த குருவே, உனக்கு நிகர் யாருமில்லை; எனில் உனக்கு மேல் வேறு யாவர்? மூன்று உலகங்களிலும் உன் பிரபாவம் ஒப்பற்றது. [11-43]



तस्मात्प्रणम्य प्रणिधाय कायं
प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः
प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥

உடல் குனிய வணங்கி, நின் அருள் வேண்டுகிறேன்; ஈசா, உடையானே, மகனைத் தந்தை போலும், தோழனைத் தோழன்போலும், காதலியைக் காதலன்போலும் என்னைப் பொறுத்தல் வேண்டும், தேவனே. [11-44]

---

## 28

## முடிவுரை

ஆக, நாம் படித்த விஷயங்களைச் சங்கிரகமாகச் சொல்லின், முன் ஜன்மத்தில் செய்த கருமங்களினுலும், கொண்ட பற்றுகளாலும் நாம் சில குணங்களுடனும், உடல் பிரகிருதிகளுடனும் பிறக்கிறேம். அந்தச் சுபாவ குணங்கள் ஜீவனைக் கட்டுப்படுத்தி நிற்கின்றன. அவற்றை முழுதும் நிக்ரகித்து விடலாமென்று பக்குவமடையாத காலத்தில் துறவியாய்ப் போகப் பிரயத்தனப்படுவதில் பயனில்லை. ஆனல் அந்தச் சுபாவ குணங்களைவென்று, விடுதலையடைய முயற்சி செய்யும் சுதந்திரமும், சக்தியும் ஜீவனுக்கு உண்டு. இந்த ஜன்மத்தில் ஜீவன் எப்படி நடந்துகொள்கிறனே அதன்படியாகும் அவனுடைய வரப்போகும் சரித்திரம். ஒருவன் பழைய கருமத்தினின்று, ஸம்பூர்ணமாகவோ, அல்லது கொஞ்சம் கொஞ்சமாகவோ, விடுதலை யடைவதோ, அல்லது முன்னிருந்த பந்தத்திற்கு இன்னும் கூடச் சேர்த்து அதிக பந்தங்கங் ஏற்படுத்திக்கொள்ளுவதோ, இந்த ஜன்மத்தில் அவன் எப்படி நடந்து கொள்ளுகிறனே அதைப் பொறுத்திருக்கின்றன.

பகவானுடைய திருவருளால் எத்தகைய பந்தத்தினின்றும் ஜீவன் விடுதலை யடையலாம். திருவருளின் சக்தி இது. தவிர, அந்தத் திருவருளை ஸம்பாதிக்க ஜீவன் செய்யவேண்டிய பிரயத்தனங்கள்,



கர்மவிதிப்படி பூர்வ கர்ம பந்தத்தை அறுக்கக் கூடிய புண்ய கர்மங்களாகும். பகவான் திருவருளையடைவதற்கு வழி கீதையில் சொல்லப்படுகிறது. இதற்குத்தான் யோகம் என்று பெயர். யோகம் என்றால் மூச்சை நிறுத்துவதல்ல.

பகவத்கீதையில் உபதேசிக்கப்பட்ட யோகம் ஒரே தடவை, ஒரு முறையில் செய்துவிடக்கூடியதல்ல. பல முறைகளும் கலந்து, படிப்படியாய் அனுஸரிக்க வேண்டிய வழி. கீதையில் உபதேசித்திருப்பதை அனுஸரிப்பதில் தோல்வியோ நஷ்டமோ இல்லை. பிரயத்தனத்தினலேயே லாபம் அடைவோம்.

கீதையில் சொல்லப்பட்ட யோகத்தின் அங்கங்களாவன:—

(1) இந்திரியங்களைக் காத்தல், சுத்தமான வாழ்க்கை, தினசரி ஆசாரம், அதாவது உபாசனை, வேலை, ஆகாரம், ஆராமம், தூக்கம் முதலியவைகளில் நியமம்.

(2) சுபாவத்தாலோ, சமுதாயத்தில் தான் அடைந்த ஸ்தானத்தினலோ, சந்தர்ப்பத்தாலோ தனக்கு ஏற்பட்ட கடமைகளைச் சுயநலப் பற்றின்றி, ஆனல் கண்ணுங் கருத்துமாய்க் குறைவின்றிச் செய்துமுடித்தல்.

(3) ஜயாபஜயங்களைச் சமபுத்தியுடன் அனுபவித்தல்; கஷ்டங்களைக் கண்டு மனங்கலங்காமல், துயரமோ மகிழ்ச்சியோ எதுவரினும் தைரியமும் அமைதியும் இழக்காமலிருக்க மனதைப் பழக்கிக் கொள்ளுதல்.

(4) மனதை இடைவிடாமல் காத்து, காமம், குரோதம், ஆசை என்ற வேகங்களுக்கு இடங்கொடாமலிருத்தல்.

(5) இப்படி உள்ளும் புறமும் சுத்தமாய் வைத்து மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டு, அவ்வப்போது அத்யாத்ம தியானம் செய்தல்.

(6) பகவானிடம் பூரணமாய்ச் சரணுகதி புகுதல்.

மேற்சொல்லப்பட்ட அங்கங்களில் ஒவ்வொன்றும் தனித்தனியாகப் பேர்வைத்துச் சிறப்பாக எடுத்துச் சொல்லும்பொழுது, ஸாங்கிய யோகம், கர்மயோகம், ஞானயோகம், ஸந்நியாஸ யோகம், அத்யாத்ம யோகம், பக்தியோகம் என்று பல விதமாகச் சொல்லப்படும். ஆனல் உண்மையாக அப்பியாசம் செய்யும் முறையில் இவையெல்லாம் ஒன்றோடொன்று கலந்து நிற்கும். ஒன்றின்றி மற்றென்று அமையாது. ஆகையால் கீதையில் இவ்வெல்லா முறைகளையும் ஒருங்கே சேர்த்து ஒரு வழியாகப் பகவான் உபதேசித்திருக்கிறார்.

பக்தியுடனும் கவனத்துடனும் இதைப் படித்தவர்களுள் சிலருக்கு முடிவில் ஒரு சந்தேகம் தோன்றலாம். 'கீதையில் சொல்லியிருப்பதெல்லாம் நன்றே. ஆயினும், சாதாரண மனிதர்களுக்கு இது பயன்படுமா? இதில் காட்டப்பட்ட இலட்சியங்கள் அனைத்தையும் அடையும் சக்தி நமக்கு இல்லையே? இது நமக்கு எவ்வாறு உதவும்? மகாத்மாக்களுக்குத்தான் இதில் சொல்லப்பட்டிருப்பது சாத்தியம்' என்றிவ்வாறு திகைக்கலாம்.



கண்ணன் காட்டிய வழி மட்டுமல்ல, உலகத்தில் ஜனங்கள் தழுவும் எல்லா மதங்களும், மார்க்கங்களும் இந்த ஆக்ஷேபத்துக்கு இடம் தரும். எந்த உயர் மதக் கொள்கையையும், எந்தத் தரும நூலில் உபதேசிக்கப்பட்ட வாழ்க்கை முறையையும், குறைவின்றி முழுவதும் அநுசரிப்பது அனைவராலும் முடியாது. உதாரணமாக, ஏசுநாதருடைய உபதேசத்தை எடுத்துக்கொள்ளுவோம். அவர் நடத்திக்காட்டிய வாழ்வுக்கும், சொன்ன உபதேசங்களுக்கும் முற்றிலும் இணங்க யார் வாழ முடியும்? ஆயினும், அவருடைய மார்க்கத்தைத் தழுவி நிற்பவர்களுக்கு அதில் பயனில்லையா? எத்தனையோ மக்களை அது காப்பாற்றி உய்வித்திருக்கிறது. மகான்களுக்கு மட்டுமல்ல, பாமர ஜனங்களுக்குங்கூட உடலுக்கு அன்னம் எவ்விதமோ அவ்விதம் உள்ளத்திற்குப் பசியாற்றும் அன்னமாக அந்த உபதேசம் பயன்பட்டு வந்திருக்கிறது. அத்தகையனவே எல்லா மார்க்கங்களும்; அத்தகையதே கீதையும்.

கையில் விளக்கெடுத்துச் செல்லுங்கால் நம்முடைய நிழலே வழியில் குறுக்கிடும். மரமும், புதரும், வெளிச்சத்தைத் தடுக்கும். ஆயினும் இது விளக்கின் குற்றமல்ல. விளக்குப் பயனற்றும் போகவில்லை. பாவமும், கஷ்டமும், சந்தேகமும்,

ஆசையும், ஆத்திரமும், தடையாக வந்தாலும், கீதையில் உபதேசிக்கப்பட்ட இலட்சியங்களை வைத்துக் கொண்டு நடந்தோமனல் இருளைத் தாண்டி ஈடேறலாம். ஒவ்வொருவராலும் ஒவ்வொன்றையும் செய்ய முடியாதாயினும், அனைவரும் ஒரே உயர் லட்சியத்தைக்கொண்டு நடப்பதனல் அனைவருடைய வாழ்க்கைக் கிரமமும் ஒழுங்குபட்டு, அனைவருக்கும் கூட்டுறவுச் சுகமுண்டாகும்.

சாதாரணமாய் உடலின் சுகாதாரத்திற்காகச் சொல்லப்படும் முறைகளையுங்கூட எல்லோரும் குற்றமின்றி, குறைவின்றி முழுதும் நடத்திவிட முடியாது. ஆயினும் குறைகளுடன் தழுவப்பட்ட சுகாதார உபதேசங்களினல் மிகப் பெரிய நன்மைகள் ஏற்படுவதைக் காண்கிறோம். உடற் சுகாதாரத்தைவிட ஆத்ம சுகாதாரம் கடினமல்லவா ? அதற்காக உபதேசிக்கப்படும் முறைகளும் கடினமாகத்தான் இருக்கும். அனைவரும் அவற்றைக் குற்றங் குறையின்றித் தழுவி நடப்பது அசாத்தியமாய்த்தானிருக்கும். ஆயினும் உபதேசம் பயனற்றதாகப் போகாது. உயிர் லட்சியம் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. முற்றிலும் அடைய முடியாதென்று தரும விளக்கை அணைத்துவிட்டு இருட்டில் நிற்கலாகாது. கீதையிலேயே பகவான் சொல்லியிருக்கிறார் :—

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥



இந்த முறையில் எடுத்த முயற்சிக்கெல்லாம் பலனுண்டு; நஷ்டம் கிடையாது. பத்தியம் தவறிய மருந்தைப் போலல்ல. குற்றங் குறைகள் ஏற்பட்டால் அபாயம் எதுவுமில்லை. இந்தத் தருமத்தில் சிறிது நடத்தினலும் ஸம்ஸாரமென்ற பேரச்சத்தினின்று காப்பாற்றிக்கொள்ளலாம். [2-40]

முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணர்ப்பணம்.

மாடல் அச்சுக்கூடம், சென்னை.—(1938111-3-33.)